ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்
திங்கள் தோறும் வெளிவருவது

சிலம்பு உ. } மெய்கண்டான் ஆண்டு-எளஉ கார்த்திகைத் திங்கள் 1924ஆம் நவம்பர்—டிசம்பர்மீ { பரல் கக.

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## தமிழ்ஞான சம்பந்தர்

(சுகஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

நமதாசிரியர் தேவாரத்துள் எல்லாம்வல்ல முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானைப் பூவும் நீருங் கொண்டு வழிபாடியற்றுதலைக் குறிக்கும் இடங்களை முதற்கண் தொகுத்துக் கூறுகின்றேம்.

முதல் திருமுறை

'கொய்து பத்தர் மலரும் புனலுங் கொடு தூவித் துதிசெய்து'
(திருப்புகலூர்)

'பத்தரோடு பலரும் பொலியம்மலரங்கைப் புனல் தூவி
யொத்த சொல்லியுலகத்தவர்தாந் தொழுதேத்த' (திருவலிதாயம்)
'வம்மின்னடியீர் நாண்மலரிட்டுத் தொழுதுய்ய
வும்மன்பினோ டெம்மன்பு செய் தீசனுறைகோயில்'
'மறையாயின பலசொல்லி யொண்மலர் சாந்தவை கொண்டு
முறையால் மிகுமுனிவர் தொழுமுது குன்றடை வோமே'
(திருமுதுகுன்றம்)
'காலம் பெறமலர்நீரவைத் தூவித் தொழுதேத்தும்' (திருநெய்த்தானம்)
'நறைமலிதரு மளறொடு முகை நகுமலர் புகை மிகுவள ரொளி
நிறைபுனல் கொடுதனை நினைவொடு நியதமும் வழிபடுமடியவர்'
(திருச்சிவபுரம்)
'கடியார் மலர்புனல் கொண்டுதங் கழலே தொழுதேத்தும்'
(திருப்புள்ளமங்கை, ஆலந்துறை)
'தெருளார் தருசிந்தையொடு சந்தம் மலர் தூய்' (இடும்பாவனம்)
'நினைவார் நினைய வினியான் பனியார் மலர் தூய் நித்தலுங்
கனையார் ... ... ... ' (திருப்புறவம்)
'கடிகமழ் மாமலரிட்டுக் கறைமிடற் றானடி காண்போம்'
(திருவார்கொளிபுத்தூர்)
'விரைகமழ் மாமலர் தூவி விரிசடையானடி சேர்வோம்' ,,
'தாரணவு மாமலரிட்டுத் தலைவன தாணிழல் சார்வோம்' ,,
'காரிடு மாமலர் தூவிக் கறைமிடற்றானடி காண்போம்' ,,
'தலையவிழ்மா மலர் தூவித் தலைவன தாளிணை சார்வோம்' ,,
'தடமலராயின தூவித்தலைவன தாணிழல் சார்வோம்' ,,
'சயவிரிமாமலர் தூவித் தாழ்சடையானடி சார்வோம்' ,,
'விரிமலராயின தூவிவிகிரிர்தன சேவடி சேர்வோம்' ,,
'தொண்டர்கள் மாமலர் தூவத் தோன்றநின்றானடிசேர்வோம்' ,,
'மன்னுமா மலர்கடுவிடநாளுமா மலையாட்டியுந் தாமும்' (திருப்பாம்புரம்)
'பொன்னடியே பரவிநாளும் பூவொடு நீர்சுமக்கு
நின்னடியாரிடர்களையாய் நெடுங்களமே யவனே' (திருநெடுங்களம்)
' ... ... ... கொய்மலரா
லேலவிண்டைகட்டி நாமமிசைய வெப்போது மேத்து'
(திருமுதுகுன்றம்)
'நறை கொண்டமலர் தூவி விரையளிப்ப நாடோறு, முறை கொண்டு
நின்றடியார் முட்டாமே பணிசெய்ய' (திருச்செங்காட்டங்குடி)
'காலைநன்மாமலர்கொண்டடி பரவிக் கைதொழு
மாமணியைக் கறுத்தவெங்கால ... ' (திருவெங்குரு)

'பொன்னியனறுமலர் புனலொடு தூபஞ் சாந்தமு
மேந்திய கையினராகிக்
கன்னியர் நாடொறும் வேடமே பரவுங்
கழுமல நினைய நம் வினைகரிசறுமே' (திருக்கழுமலம்)
'பிணிவார் சடையெந்தை பெருமான் கழல்பேணித்
துணிவார் மலர்கொண்டு தொண்டர் தொழுதேத்த' (திருநல்லம்)
'நண்ணலரியானை நல்லூர்ப் பெருமானைத்
தண்ணமலர் தூவித் தாள்கள் தொழுதேத்த' (திருநல்லூர்)
'சித்தந்தெளிவீர்கா, ளத்தனாரூரைப்
பத்திமலர் தூவ, முத்தியாகுமே.' (திருஆரூர்)
'நின்றுமலர் தூவி, யின்று முதுகுன்றை
நன்று மேத்துவீர்க், கென்றுமின்பமே' (திருமுதுகுன்றம்)

## இரண்டாந்திருமுறை

'தீர்த்த நீர்வந்திழி புனற்பொன்னியிற் பன்மலர்
வார்த்தநீர் குடைவாரிடர் தீர்க்கும்வலஞ்சுழி' (திருவலஞ்சுழி)
'பூவலர்ந்தன கொண்டு முப்போதும் பொற்கழ
றேவர்வந்து வணங்கு மிகுதெளிச் சேரியீர்' (திருத்தெளிச்சேரி)
'விளக்கும் பத்திக்கு விண்ணவர் மண்ணவரேத்தவே
திளக்குந் தீர்த்தமரு த திகழ் தெளிச் சேரியீர்' ,,
'சந்துயர்ந்தெழுகா ரகிறண்புனல் கொண்டுதஞ்
சிந்தை செய்தடியார் பரவுந் திருவான்மியூர்' (திருவான்மியூர்)
'தேனையேறு நறுமாமலர் கொண்டடி சேர்த்துவீர்'
(திருவனேகதங்காபதம்)
'குறவ நாண்மலர் கொண்டடியார் வழிபாடுசெய்' (திருவையாறு)
'......திகழ்சிக்கல் வெண்ணெய்ப்பிரான்
பாலும் பன்மலர் தூவப் பறையு நம்பாவமே' (திருச்சிக்கல்)
'தேனுலா மலர்கொண்டு மெய்த்தேவர்கள் சித்தர்கள்
பானெயஞ் சடனாட்ட முன்னாடியபால்வணன்' (திருமழபாடி)
'தொண்டெலா மலர் தூவி யேத்த ... ' (திருக்கருவூர்)
'வளங்கெழுவு தீபமொடு தூபமலர் தூவி
நளன் கெழுவி நாளும் வழிபாடு செய்நள்ளாறே' (திருநள்ளாறு)
'துணை நன்மலர் தூய்த் தொழுந் தொண்டர்கள் சொல்லீர்'
(திரு இரும்பூளை)
'பலகாலங்கள் வேதங்கள் பாதங்கள் போற்றி
மலரால் வழிபாடு செய் மாமறைக்காடா' (திருமறைக்காடு)

'நித்தலும் நியமஞ் செய்து நீர்மலர் தூவிச்
சித்த மொன்றவல்லார்க் கருளுஞ் சிவன்கோயில்' (திருச்சாய்க்காடு)
'கட்டலர்த்த மலர் தூவிக் கைதொழுமின்' ,,
'வாசநலஞ் செய்திமையோர் நாடோறுமலர் தூவி நின்கழலேத்துவார்' (திரு ஆமாத்தூர்)
''பாடவல்ல நன்மைந்தரோடு பனிமலர் கொண்டுபோற்றி செய்' (திருக்களா)
'நின்றுமேய்ந்து நினைந்து மாகரிநீரொடும் மலர் வேண்டியவான்மழை
குன்றி னேர்ந்து குத்திப்பணி செயுங் கோட்டாற்று' (திருக்கோட்டாறு)
'நீடு மலரும் புனலுங் கொண்டு நிரந்தரந்
தேடுமடியார் சிந்தையுள்ளே திகழ்வானை' (திருமுதுகுன்றம்)
'மந்தியேறியினமாய் மலர்கள் பல கொண்டு
முந்தித் தொழுது வணங்கும் கோயில் முதுகுன்றமே' (திருமுதுகுன்றம்)
'தெரிந்த வடியார் சிவனே யென்று திசைதோறுங்
குருந்த மலருங் குரவினலருங் கொண்டேந்தி'
'வம்பார் கொன்றைவன்னி மத்தமலர் தூவி'
'தேம்படு மாமலர் தூவித் திசைதொழத்தீய கெடுமே'
'சித்தருந் தேவருங் கூடிச் செழுமலர் நல்லனகொண்டு
பத்தர்கடாம் பணிந்தேத்தும் பாண்டிக்கொடு முடியாரே' (திருப்பாண்டிக் கொடுமுடி)
'பெறுமலர் கொண்டு தொண்டர் வழிபாடு செய்ய
லொழிபாடிலாத பெருமான் (திருநனிபள்ளி)
உருவரைகின்ற நாளிலுயிர் கொள்ளுங்
கூற்ற நனியஞ்சு மாதலுறநீர்'
'மருமலர் தூவி யென்னும் வழிபாடுசெய்யும்மிழி
பாடிலாத கடவி (திருநாரையூர்)
'நம்பனுர் நலமலர் கொடுதொழுதெழுமடியவர் (திருக்கோட்டூர்)
'தூயமாமலர் தூவிக் கைதொழ திருஆடானை
'பூவுநீரும் பலியுஞ்சுமந்து புகலூரையே
நாவினுலே நவின்றேத்தலோவார்' (திருப்புகலூர்)

## மூன்றாந்திருமுறை

'தண்ணருஞ் சாந்தமும் பூவுநீர் கொடு
விண்ணவர் தொழுதெழு விசயமங்கையே' (திருவிசய மங்கை)
'பிடியெலாம் பின் செலப் பெருங்கைமா மலர்தழீஇ
விடியலே தடமூழ்கி விதியினல் வழிபடுங்'' (திருக்கானப்பேர்)

'நிறையுடை நெஞ்சுளு நீருளும் பூவுளும்
பறையுடைமுழவுளும் பலியுளும் பாட்டுளுங்
கறையுடை மிடற்றண்ணல் ... ... (திருக்கானப்பேர்)

'ஊனமாமுடம்பினி லுறுபிணிகெட வெண்ணின்
ஞானமாமலர்கொடு நணுகுத னன்மையே' ,,

'பண்டிரைத் தயனுமாலும் பலபத்தர்கள்
தொண்டிரைத்து மலர் தூவித் தோத்திரஞ்சொல்க' (திருஉசாத்தானம்)

'வண்ணமாமலர் கொடுவாணவர்வழிபட' (திருமுதுகுன்றம்)

'காமுனம்மலராற்புனன்மலர் தூவியே கலந்தேத்துமின்'
(திருப்பிரமபுரம்)

'தொல்லைவைகத்தேறு தொண்டர்க டமலர் சொரிந்தேத்தவே'
(திருப்பிரமபுரம்)

'மந்தமலர்கொண்டு வழிபாடுசெயு மாணிர' (திருமாணிகுழி)

'பாடலுடையார்க ளடியார்கண் மலரோடு
புனல்கொண்டு பணிவார்' (திருவேதிகுடி)

'மாதரொடு மாடவர்கள் வந்தடி யிறைஞ்சி
நிறைமாமலர்கடூய்க்' (திருக்கோகரணம்)

'புனமுடைநறுமலர் பலகொடு தொழுமதோர்' (திருச்சேறை)

'கோலமாமலரொடு தூபமுஞ் சாந்தமுங்கொண்டுபோற்ற'
(திருவடகுரங்காடுதுறை)

'தூவியநீர்மலரேந்தி வையத்தவர்கடொழுதேத்த' (திருக்கலிக்காமூர்)

இதுநிற்க நமதாசிரியர் தேவாரத்துள் சிவபெருமானை அழல் லோம்புதல் வயிலாக வழிபாடியற்றுதலைக் குறிக்குமிடங்களை இரண்டாவதாகத் தொகுத்துக்கூறி ஆசிரியரது போக்கினை விளங்கச் செய்வாம்.

'நெய்தவழ் மூவெரி காவ லோம்புநேர் புரிநூல்
மறை யாள ரேத்த' (திருமருகல்)

'தோலொடு நூலிழை சேர்ந்தமார்பர் தொகுமறை
யோர்கள் வளர்த்த செந்தீ, மால்புகை போய்
விம்முமாட வீதி ... ,,

'நாமரு கேள்வியர் வேள்வியோவா நான்
மறையோர் வழிபாடு செய்ய ...' ,,

'புனையழலோம்புகையந்தணாளர் பொன்னடி' ,,

'விதியதுவழுவா வேதியர் வேள்வி செய்தவ ரோத்தொலி போவா'
(திருப்பாம்புரம்)

'நாலுவேதமோதலார்கள் நந்துணையென்றிறைஞ்ச' (திருச்சிரபுரம்)
'பொய்யாமொழியார் முறையாலேத்திப்புகழ்வார்' (திருப்பழனம்)
'பறப்பைப்படுத்தெங்கும் பசு வேட்டெரியோம்புஞ்
சிறப்பர் வாழ்தில்லைச் சிற்றம்பலமேய' (தில்லை)
'மண்ணிற்பெரு வேள்விவளர் தீப்புகைநாளும்
விண்ணிற்புயல் காட்டும் வீழிமிழலையே' (திருவீழிமிழலை)
'படித்தார் மறைவேள்வி பயின்றார் பாவத்தை
விடுத்தார் ... ... ' ,,
'வேதமோர் கீதமுணர் வாணர்தொழு தேத்தமிகுவாகப்
போதனைப்போன்மறையோர் பயிலும்' (ஸ்ரீ புகலி)
'இந்திர ஞால மொழிந்தின்புறவேண் டுதிரே
லந்தர மூவெயிலு மாணம் மெரியூட்டியாரூர்த்
தந்திரமாவுடையானவனெந்தலைமையானே' (திருஆரூர்)
'விண்டவர் தம்புர மூன்றெரி செய்துறைவேத நான்குமவை
பண்டிசை பாடலினுறை கோயில் பாதாளே'
(திருப்பாதாளீச்சரம்)

## இரண்டாந் திருமுறை

'நீதிலந்தண ரோத்தொழியாத் திருவான்மியூர்' (திருவான்மியூர்)
'வேதமொடு வேதியர்கள் வேள்வி முதலாகப்
போதினொடு போதுமலர் கொண்டுபுனைகின்ற' (திருக்கருப்பறியலூர்)
'வேதியர்கள் வேள்வி யொழியாது மறைநாளு
மோதியரனுமமுமுணர்த்திடு நள்ளாறே' (திருநள்ளாறு)
'வேதம் பல வோமம் வியந்தடி போற்ற
வோதம் முலவும் மறைக்காட்டி லுறைவா' (திருமறைக்காடு)
'வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாகப்
போதத்தால் வழிபட்டான் புள்ளிருக்குவேளூரே'
(திருப்புள்ளிருக்குவேளூர்)
'தீயோம்பு மறைவாணர்க் காதியாந்திசைமுகன்மால்' (திருவேணுபுரம்)
'ஊழியூழியுணர்வார்கள் வேதத்தினொண்பொருள்களால்'
(திருக்கேதாரம்)

## மூன்றாந் திருமுறை

'செந்தழலோம்பிய செம்மை வேதியர்க்
கந்தியுண் மந்திரமஞ் செழுத்துமே' (திருப்பஞ்சாக்கரப்பதிகம்)
'அந்தணர் வேள்வியு மறைத் துழனியுஞ்
செந்தமிழ்க் கீதமுஞ் சீரினல் வளர்தர' (திருமழபாடி)

'வேதமலிந்தவொலி விழவின்னொலி வீணையொலி
கீதமலிந்துடனே கிளரத்திகழ் பௌவமறை
யோத மலிந்துயர்வான் முகடேற" (திருப்பிரமபுரம்)

'மானபுகழ் வேதியர்க ளாகுதியின் மீதுபுகை போகியழகார்"
(திருமயிலாடுதுறை)

"வேதமொடு வேள்வி பலவாயின மிகுத்து" (திருவைகா)

நமதாசிரியரது திருப்பதிகங்கள் யாவும் சிவபெருமானின் வடிவ வழிபாட்டிற்கிடமாகிய திருக்கோயில்களிலேயே பாடப் பெற்றன. வேள்விச் சாலையின் கண்ணே யாதொரு பதிகமும் பாடப் பெறவில்லை. திருக்கோயில் வழிபாடு ஆகம வழிபாடாகிய பண்டைத் தமிழர் வணக்க முறையாகும். நமதாசிரியர் தமது தேவாரத்துள் அழலோம்புதலை ஒரோவோரிடங்களில் கூறுகின்றனரே யன்றிப் பூவும் நீருங் கொண்டு பூசனை புரியும் ஆகம வழிபாட்டினையே பல இடங்களிலும் சிறப்பாக எடுத்து ஓதக் காண்கின்றோம். அழலோம்புதலைக் குறித்த இடத்தும் அங்ஙனஞ் செய்யும் அந்தணர் திருக்கோயிலில் சிவபெருமானை வழிபடுவதாகவே குறிக்கப்பட்டார்கள். ஆதலின் நமது ஆசிரியரது தேவாரத்துள் சிறப்பாக ஆகம வழிபாடாகிய வடிவ வழிபாடே தெளிவுபெற நிலைநாட்டப் பெற்றது. அழல்வாயிலாகச் சிவபெருமானை வழிபடும் அந்தணர் கொள்கையும் சைவ நெறிப் பாற்பட்டதாகலின் அதனை நமது ஆசிரியர் தழுவிக் கொண்டனர். எனினும், சைவ நெறிக்குச் சிறப்பாக உரிய வடிவ வழிபாடே அவர் தேவாரமெங்கும் மிக்குத் திகழ்கின்றது. தாம் பிறந்த மரபிலுள்ளாரையும் சைவ நெறிப் பாற்படுத்தி உய்விக்கும் அருளுடைக்கமுடையாராகலின் சிவசம்பந்தமான சைவத் தொடர்புடைய இரு நெறிகளையும் ஆசிரியர் எடுத்தோதினர். இக் கருத்தேபற்றி சேக்கிழார் பெருமானும் 'வேதநெறி தழைத்தோங்க, மிகுசைவத் துறைவிளங்க என்றனர்.

சிவபெருமானை, பேரருளாளராதலால் அந்தணரென்றும், கல்விக்கு முதல்வராதலால் வேதியர் என்றும் ஓதினமை போல அவரைச் சைவரென்று நமது ஞானசம்பந்தப் பெருமான் பல இடங்களிலும் விதந்தோதியிருக்கின்றனர். 'சாந்தமென நீற

ணிந்த சைவரிடம்போலும்' (திருக்குறும்பலா) எனவும், 'தார கையினொளி சூழ்ந்த மதிசூடிய சைவர்' எனவும், 'கரியினுரி யர் காதலாற் சைவர் பாசுபதர்கள் வணங்குஞ் சண்பை நகராரே' திருச் சண்பைமாநகர்) எனவும் ஆசிரியர் கூறியவாற்றான் விளங் கப்பெறும். இஃதறியாதவர்கள் நமது ஆசிரியரைச்சைவம்பற்றாத வைதிக நெறியினர் என்பர். பிராமணர் என்ற ஆரிய மொழி யால் நமது ஆசிரியர் தேவாரத்தில் யாண்டுங் கூறப்படவில்லை. இக்காரணம்பற்றி நமது ஆசிரியர் தமிழ் ஞானசம்பந்தர் என்னுந் திருப்பெயருடையர் போலும்.

இனி, நமதாசிரியரது திருப்பதிகங்களின் பொருளமைப் பைக் கருதுவார்க்கு ஆசிரியரது திருவுள்ளம் தமிழ்ப் பெரும் பாவலரது உள்ளம் யாவற்றிற்கும் ஓர் ஒப்பற்ற கண்ணாடிபோல்வ தென்பது இனிது விளங்கும். இயற்கைப் பொருள் வளங்களை வகுத்து விரித்து நயம் பெறப் பல்லாற்றானுஞ் சிறப்பித்தலும், அகப்பொருள் நலத்தினைச் சுவை மிகச் செய்யுட்களி லமைத்த லும், அன்பு முதலிய உயிர்த் தன்மைகளை விதந்தோதி மெய்ப் பாட்டிலக்கணத்திற்கு நல்லிலக்கியமாகப் பாட லமைத்தலும் தமிழ் நல்லிசைப் புலவரது சிறப்பியில்களாகும். வடமொழியில் ஆதிகாவியமாகிய வால்மீகி இராமாயணத்தில் நாட்டு வருணனை, நகர வருணனை முதலிய இயற்கை வருணனைகள் மிகுதியாகக் காணப் பெறவில்லை. அகத்துறைகளும் வடமொழிக் குரியன வல்ல. வேள்வி, அரசு, போர் முதலிய புறப்பொருள்களின் வரு ணனையே பண்டை வடநூலுள் மிகுத்துக் காணப்படும். வட நூற்போக்கிற்கும் தமிழ் நூல் போக்கிற்குமுள்ள வேறுபாடு உற்றுநோக்குவார்க்கு நமதாசிரியர் தமது முற்பிறவிகளில் அருந் தவமிக்க தண்டமிழ்த் தலைவராக இருந்திருத்தல் வேண்டு மென்று ஊகிக்கும் கருத்தெழாநிற்கும். இதுபற்றியே தம்மைத் 'தமிழ்க் கிழமை ஞானம்' என்று ஆசிரியர் விதந்தோதினர் போலும். நமதாசிரியர் தேவாரம் தமிழச் சிறப்பியல்புகள் மலிந்துள தென்பது ஈண்டுக் காட்டுதும்.

(தொடரும்) கா. சுப்பிரமணிய பிள்ளை எம். ஏ., எம். எல்.

# தமிழ்மொழி வரலாறு

தமிழ் என்ற சொல்லுக்கு இனிமையென்பது பொருள். எல்லா இனிமைகளும் பொருந்திய மொழியாதலால் இதற்குத் தமிழ் என்ற பெயர் வந்தது. தமிழ் என்ற சொல்லிலுள்ள எழுத்துக்களையும் அவற்றின் வைப்பு முறையையும் ஆழ்ந்து நோக்கில், அச்சொல் இம்மொழியின் இலக்கணங்களை உணர்த்தும் அரிய நுண்ணிய தலைமைச் சூத்திரம் என்று கருதத்தக்கதாய் அமைந்து உள்ளது. அது விரிக்கிற் பெருகும்.

தமிழ் நாடு முற்காலத்தில் நாற்பக்கங்களிலும் கடலால் சூழப்பெற்ற நாவலந்தீவு என்று பெயரிய ஒரு தீவாயிருந்தது. அதில் தென்பகுதியில் நாற்பத்தொன்பது உள்நாடுகளையுடைய தமிழகம் என்ற பெரும் பகுதியில் தென்மதுரை என்ற பாண்டிய நாட்டுத் தலைநகரில் தமிழ்ச் சங்கங்களில் முதற்கழகம் நிலைத்திருந்தது. அஃதிருந்து இற்றைக்கு சற்று ஏறக்குறைய 11783 ஆண்டுகளாகின்றன. அதாவது முதற்சங்ககாலம் 4440 யாண்டு, இடைச்சங்க காலம் 3700, கடைச்சங்ககாலம் 1850. ஆக 9990. கடச்சங்க விறுதிக்காலம், கிருத்துவ ஆண்டு இரண்டாவது நூற்றாண்டில் முப்பதாவது ஆண்டென்று சிலப்பதிகாரம் "ஆடித்திங்கட் பேரிருட்பக்கத்து" என்ற பாட்டாலும் பிற சான்றுகளாலும் தீர்மானிக்கப் பெறலாம். சங்ககாலத்தில் கி. பி. 1793 ஆண்டுகள் சேர்க்க 11783 ஆண்டுகள் ஆகின்றன.

முதற்சங்கமிருந்த காலத்தில் இப்பொழுது மிகப் பெரியதாய் விளங்குகிற இமயமலை தோன்றவில்லை. பின்னர் நாவலந்தீவின் வடபாலிருந்த கடலில் மிக அகன்று உயர்ந்த ஒரு மலைத்தொடர் கிளம்பியது. அதுவே இப்பொழுது இமயமலை (சிமயம்) எனப்படுகிறது. அக்காலத்தில்தான் வடபகுதியிலிருந்த நீர்ப்பெருக்குத் தென்பாற்சென்று பெருகித் தமிழ் முதற் சங்கமிருந்த தமிழகம் எனப்பட்ட தென்மதுரை நாட்டை உட்கொண்டதுபோலும். அப்படிக் கடல் கொள்ளப்பெற்ற இடத்

தையே ஆங்கிலச்செய்தி ஆசிரியர் பலர் இந்து மாக்கடலில் முழுகிய நிலம் (Lemuria=Submerged Land) * என்று கூறுகின்றனர்.

அந்தக் கடல்கோள் முதல் ஊழி எனப்படுகின்றது. அக்கடல் கோளுக்கு முற்பட்ட காலம் முதற் சங்ககாலம் என்று பெயர்பெற்றது. முதற் சங்கந் துவக்கிய காலம் இற்றைக்கு 11,783 என்று முன்னர்க் கூறிப்போந்தபடியால் சற்று ஏறக்குறைய 12,000 ஆண்டுகளுக்கு முன்னமே தமிழ் மிகச் சீர்த்தேற்றமடைந்திருந்ததாய்க் கருதத்தக்கதாகின்றது. முதற்சங்கத்தில் அகத்திய முனிவர் செய்த இயல், இசை, நாடகமென்ற முத்தமிழ் இலக்கணமாகிய அகத்தியம் இப்பொழுது

---

* Home university library of modern Knowledge:—
Peoples and Problems of India by Sir. T. W. Holderness. K. C. S. I. chapter 1, Page 23.

Peninsular India or the Deccan (Literally the country to the south) is geologically distinct from the Indo Gangetic plain and the Himalaya. It is the remains of a former continent which stretched continuously to Africa in the space now occupied by the Indian Ocean. The rocks of which it is formed are among the oldest in the world and show no traces of having ever been submerged. In many parts they are overlaid by a sheet of black "trap" rock or basult which once flowed over them as molten lava. In the Deccan we are therefore in the first days of the world we see land substantially as it existed before the beginnings of life.

The Indo—Gangetic plain stretches without a break from the Indus on the west to the delta of the Ganges on the east, a distance of twelve Hundred miles. When the world was still in the making and before the elevations of the Himalaya the space now occupied by the plain was a sea. The southern shore of this sea was what is now peninsular India. With the rise of the Himalaya,

முற்றிலும் அகப்படாவிட்டாலும் பழையவுரைகளில் மேற்கோள்களாகக் கிடைக்கும் சூத்திரங்களையும், அவற்றின் நுட்பங்களையும், ஆழ்ந்தகருத்துக்களையும், அழகையும் உய்த்துணரில்அவை இப்பொழுது எந்நாட்டிலும், எந்தமொழியிலுமுள்ள கருத்துக்களினுயர்வில் எவ்வாற்றாலும் தாழ்ந்தனவல்ல. அகத்திய சூத்திரங்களில் 'என்மனார் புலவர்' 'என்ப' என்றுகாணப்படலால், அகத்

---

the sea disappeared and the rivers draining the Himalaya flowed into the depression bringing with them the filt which is now the soil of the plain.

இதன் மொழிபெயர்ப்பு:

புதிய ஆராய்ச்சிபற்றிய இலண்டன் பல்கலைக் கழக நூற் கருகூலம்:—

சர் T. W. ஹோல்டர்னெஸ் K. C. S. I. லண்டன் அவர்கள் எழுதிய இந்திய மக்களையும் பொருள்களையும்பற்றிய நூல். 1-வது அத்தியாயம் 23-வது பக்கம். கருத்து.

"இந்தியாவின் தென்பகுதியானது கங்கை ஆறு பாயும் நிலப் பரப்புக்கும் இமயமலைக்கும் வேறானது. அஃது இப்பொழுது இந்துக்கடல் இருக்கின்ற இடத்தில் ஆப்பிரிக்கா வரையில் தொடர்ச்சியாய் நீண்டிருந்த பழைய கண்டத்தில் மிச்சமாயிருக்கின்றது. இதிலுள்ள குன்றுகள் உலகத்திலுள்ள மிகப் பழையவற்றிற் சேர்ந்தன. இவைகள் ஒரு காலத்திலும் நீரில் மூழ்கியிருந்த குறிகள் இல்லவேயில்லை. அக்குன்றுகளில் பலவிடங்களிற் கருங்கற் பாறை தகடாய்ப் பரவியிருக்கின்றது. அஃது ஒருகாலத்தில் உருகிய கிட்டவெள்ளமாகப் பரவியதுபோலிருக்கிறது. ஆகையால் உலகின் முற்காலத்தில் உயிர்கள் தோன்று முன்னர், இருந்தபடியே நிலப்பரப்பைத் தெக்கணத்தில் (இப்பொழுது) கங்கைக் கழிமுகம் வரை 1,200 மைல்தூரம் இடைவெளியின்றி நீண்டிருக்கிறது. மண் உலகு வளர்ந்துகொண்டிருக்கும்பொழுது இமயமலை கிளம்பும் முன்னர் கங்கை நிலவெளி இருக்குமிடம் கடலாக இருந்தது. இந்த வடகடலின் தெற்குக்கரை இப்பொழுது தீபகல்பமாயிருக்கிற நிலப்பரப்பாயிருந்தது. இமயமலை கிளம்பியபொழுது தன்னோடு மண்ணைக் கொண்டுவந்தது. அம்மண்ணால் இப்பொழுதுள்ள வெளிநிலம் உண்டாகியது."

நியருக்கும் அகத்தியத்துக்கு முன்னரும் பலநூல்கள் இருந்த னவாய் விளங்குகின்றது. அதன்பின் கவாடபுரத்தில் நிலைத்திருந் தது இரண்டாவது சங்கம் அதன் காலம் 3,700 ஆண்டு. அச் சங்கத்தின் பிற்காலத்தில் வடமொழி ஆதிகாவியமாகிய வான்மீக இராமாயணம் கூறும் இராம கதை நடந்ததாய்த் தெரியவருகி றது. அவ்விராமாயணத்தில் சீதையைப் பார்க்க அனுப்பப்பட்ட அநுமாருக்குத் தெற்கிலுள்ள பாண்டியன் ஆண்டிருந்த கவாட புரத்தைப்பற்றிக் கூறப்படலும், கவாடபுரத்திற்குத் தெற்கில் தலையாய வேதத்துகள் (மறைகள்) தோன்றிய தலைச் சங்க மிருந்த தென்மதுரை, கடல் கொள்ளப்பெற்று அதிலிருந்த மகேந்திரமலையின் கீழ்ப்பகுதி கடலுண் மூழ்கி மேற்பகுதி எஞ்சியிருத்தலும் அதிலுள்ளனவும் கூறப்படலும், தென் மதுரையில் மகேந்திரமலை முதற்சங்க காலத்தில் சிறப்புற்றிருந் தமையைக் குறிக்கின்றது. அவ்வுண்மை வான்மீக இராமயா ணம் கிட்கிந்தா காண்டம் 41-வது சருக்கம் சுலோகம் 21,

சித்ரநாநாநகச்ரீமாந் மஹேந்த்ர பர்வதோத்தம:

ஜாதரூபமயச்ரீமா நவகாடோமஹார்ணவம்.

(இ-ள்) வியக்கத்தக்க பலவகையான மரங்களுடையதும் அழ கியதும் மலைகளிற் சிறந்ததும் பொன்மயமானதும், செல்வம் பொருந்தியதும் ஆகிய மகேந்திரமலை பெருங்கடலுள் மூழ்கி யிருக்கிறது.

மேற்கூறிய தமிழகத்தில் தென்மதுரையில் முதற்கழகமும் கவாடபுரத்தில் இடைக்கழகமும், இப்போதுள்ள மதுரையில் கடைக்கழகமும் கூட்டி நடத்திய வரையர் முறையே காய்சின வழுதி, வெண்டேர்ச்செழியன், முடத்திருமாறன் முன்னைய பாண்டியர் ஆவர். பாண்டியர் ஆட்சிக்காலம் முதற்கழகந் துவக் கிய 12000 ஆண்டுகள்தாமென்று கொள்ளற்க. உலகில் மக்கள் தோன்றிப் பல்கிப் பெருகிக் குடிகள் மிகுத்துப் பொதுமக்கள் ஒரு தலைவனைத் தேர்ந்த முதற்கால முதல் பாண்டியராட்சி

தொடர்ந்துவந்துளதென் றுணர்த்த.தமிழ் மறையாகிய திருக்குறளில்

"வழங்குவ துள் வீழ்ந்தக் கண்ணும்
பழங்குடி பண்பிற்றலை பிரிதலின்று"

என்ற குறளுக்குப் பரிமேலழகர் பழங்குடி=தொன்று தொட்டு வருகின்ற குடியின்கட் பிறந்தார்; தொன்று தொட்டுவருதல்= சேரசோழபாண்டியரென்றாற்போலப் படைப்புக்காலம் தொட்டு மேம்பட்டு வருதல், என்று உரை வரைந்திருக்கின்றனர். ஆதலால் பாண்டிய நாடும் பாண்டியராட்சியும் படைப்புக்காலந் தொட்டுத் தொடர்ந்துவருகின்றனவென்று குறிக்கப்படுகின்றது. இனிப் பல கலைகளால் உண்டாகும் மனவிரிவும் தெய்வ நேயமும் தமிழ் நாட்டில் இயல்பாய் தொன்றுதொட் டுள்ளனவென்று திருமூல நாயனார் "அவிழுமனமும் ஆதி அறிவுந்—தமிழ் மண் டலமைந்துந் தத்துவமாமே" என்று விளக்கியுள்ளார். உலகத்தில் தெய்வ வணக்கஞ் செய்வதற்குரிய திருப்பதிகளில் பழமையானது அதாவது முதற்காலத்தில் ஏற்பட்ட திருப்பதி பாண்டிய நாடென்று மணிமொழித் தேவர் திருவாசகத்தில் "பாண்டிய நாடே பழம்பதியாகவும் பத்திசெய்யடியரைப் பரம்பரத்துய்ப் பவன்" என்று விளக்கியருளினார்.

தெய்வ வணக்கத்துக்குரிய ஒரு கோவிலை அல்லது ஒரு கோவிலுடைய ஊரைத் திருப்பதியாகக் கொள்ளல் வழக்கமாயிருக்க பாண்டிய நாட்டையே திருப்பதியாகக் கூறியது அந்நாடு முழுவதிலும் எங்கும் கோவில்களும் தெய்வ நிலையங்களும் அவற்றில் வணக்கமும் நிரம்பியிருந்ததென்பதைக் குறிக்கின்றது. பழம்பதியென்றது உலகில் முதலில் தெய்வ நம்பிக்கையும் தெய்வவணக்க நிலையமும் ஏற்பட்டது பாண்டிய நாட்டிற்றான் என்று விளக்குகின்றது. மேற்கூறிப் போந்தவற்றால் பன்னீராயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே தமிழ்ச் சங்கமும், பல கலைகளும், கடவுளன்பும், நல்லொழுக்கமும், தமிழரசாட்சியும் இத் தமிழகத்தில் சிறப்புற்றிருந்தனவாய்த் தெரியவருகின்றது.

அவ்வளவு சீர்த்தேற்றமடைவதற்கு, அதற்குமுன் பல நூற்றாண்டுகள் அல்லது பல்லாயிரம் ஆண்டுகள் கழிந்திருக்கவேண்டும். படைப்புக்காலந்தொட்டு சேர, சோழ, பாண்டியர் குடிகள் தொடர்ந்து வந்திருக்கின்றனவென்று கூறுவதால் படைப்புக் காலத்துக்கும் தமிழ் நாட்டிற்கும் தமிழுக்கும் ஒரு தொடர்பு இருந்ததாய்க் கருதத்தக்கதாகின்றது.

தமிழ் மொழியைப்பற்றி ஆராயில் தமிழ் வேறு சில மொழிகளைப்போலச் சில நூற்றாண்டுகளின் முன் அல்லது சில ஆயிரம் யாண்டுகளுக்கு முன் உண்டானதல்ல. அஃது இயல்மொழி. மொழிகள் எல்லாவற்றிற்கும் முந்திய பழையமொழி. படைப்புக்காலந்தொட்டு வழங்கிவரும் இயலொலிகளோடு கூடிய இனியமொழி என்று புலப்படுகின்றது. அவ்வுண்மையை,

கம்ப இராமாயணம் அகத்தியப்படலம்:—

'என்றுமுள தென்றமிழியம்பியிசை கொண்டான்'

திருப்புகழ்—301:—

'அமருமிடனன லெனுமொருவடிவுடை
யவனினுரையவன் முதுதமி ழுடையவன்'

,, 536:—

'முதியமாதமி ழிசையதாகவே
மொழிசெய்தே நினைந்திடுமாறு'

,, 223:—

'பழமொழி யெழுதிய கணபதிபிளேயானே'

தொல்காப்பியம்:—

'தோலென மொழிப தொன்மொழிப் புலவர்'

என்ற மேற்கோள்கள் வலியுறுத்துகின்றன.

தமிழ் படைப்புக்காலந் துவக்கி யுளதென்று, 'என்றுமுள தென்றமிழ்' என்பதும்; ஏனையவெல்லா மொழிகளினும் முந்திய தென்று 'முதுதமிழ்' 'பழமொழி' 'தொன்மொழி' என்பன

வும் உணர்த்துகின்றன. பனம்பாரனாரியற்றிய தொல்காப்பியப் பாயிரத்தில் "செந்தமிழியற்கை சிவணிய நிலத்தொடு முந்து நூல்கண்டு" என்று தமிழகத்தில் தமிழ்மொழி இயல்பிற் பொருந் தியதென் றுணர்த்தலால் தமிழ் ஏனைய மொழிகளைப்போலச் செயற்கை மொழியுமன்று வந்தேறிய மொழியுமன்று. தமிழ் தமிழ்நாட்டில் இயல்பிற் பிறந்தமொழியென்று தெளிவாகின்றது.

இனிப் படைப்புக்காலந்தொட்டுத் தமிழர் தமிழகத்தில் நிலை பெற்றுள்ளாரென்று நூல்கள் கூறுவதுபோல மக்கட்டோற்ற மும் தமிழகத்திலேயே நிகழ்ந்ததென்று கூறலைப் பல நூல் களிற் காண்கின்றோம். வடமொழிப் புராணங்களிலும் அங்ஙு னமே கூறப்படுகின்றது. கலிங்கத்துப்பரணி இராசபாரம்பரியம்,

"ஆதி மாலமல நாபிகம லத்த யனுதித்
தவன்ம ரீசியெனு மைந்தனை யளித்த பரிசும்
காதல் கூர்தரு மரீசிமக னாகி வருமக்
காசி பன்கதி ரருக்கனை யளித்த பரிசும்"

"அவ்வ ருக்கன்மக னாகிமநு மேதி னிபுரந்
தரிய காதலனை யாவினது கன்று நிகரென்
றெவ்வ ருக்கமும் வியப்பமுறை செய்த பரிசு
மிக்கு வாகுவிவன் மைந்தனென வந்த பரிசும்"

என்று வழிமுறை கூறுதலானும் மக்கட்டோற்ற மிந்நாட்டி லேயே யுண்டாயதென்று விளங்குகின்றது. மக்கள் தோன்றிய விடம் இந்நாட்டில் எப்பகுதியென்பதையும் பிறசான்றுகளையும் ஆராயில், இப்பொழுது இந்துமாக்கடலுண் மூழ்கியிருக்கும் தமிழ் முதற்கழகம் வீற்றிருந்த தென்மதுரை நிலவிய தமி ழகமே மக்கள் முதற்கட் டோன்றிய விடமென ஆங்கிலப் புல வர் ஹேறக்கல் (Prof. Hackel) முதலிய செய்தி நூலாசிரியரும் மக்கணூலும் விளக்குகின்றன.

சில வாங்கில மெய் நூலாசிரியர் (Scientist) மக்களுண்டா தற்குரிய வித்தின் வெப்பம் உலகின் நடுக்கோட்டின் சந்தியி

னுண்டாமென்றும் அச்சந்தி இப்பொழுது இந்துமாக்கடலில் மூழ்கியிருக்கும் நிலப்பகுதியி லிருந்ததால் அவ்விடந்தான் மக்கள் முதலிற் றோன்றியவிடமென்றும் கூறுகின்றனர். இவ்வாறு பல அறிஞர் ஒரு முடிவுக்கு வருதலானும் தமிழரில் சில பகுப்பார் படைப்புக்காலந் துவக்கி இடைவிடாது தமிழ் நாட்டிலேயே வாழ்கின்றனரென்பது தமிழ்நூல் முடிவாதலானும், முதற்கழகம் சிறந்திருந்தது தமிழகத்துத் தென் மதுரையாதலானும் மக்கள் முதற்றோன்றியவிடம் தமிழக மென்று தீர்மானிக்கத்தக்கதாகின்றது.

(இன்னும் வரும்)

விருதை சிவஞான யோகிகள்,
தமிழ்வைத்தியம்.

---

## இலக்கண விளக்க உரை வரலாற்று மயக்க மறுப்பு

"நூல் செய்தவனந் நூற்குரை யெழுதல்
முறையே யெனிலே அறையக்கேள் நீ
முன்பின் பலரே யென்கண் காணத்
திருவாரூரிற்றிருக் கூட்டத்திற்
றமிழ்க்கிலக்காகிய வயித்திய நாதன்
இலக்கண விளக்கம் வகுத்துரை யெழுதினன்'

எனச் சுவாமிநாத தேசிகர் தாமியற்றிய இலக்கணக் கொத்துள் எடுத்துக் காட்டியதும், 'வடநூற்கடலுந் தென்றமிழ்க் கடலும் நிலகண்டுணர்ந்த ஆசிரியர் மாதவச் சிவஞான முனிவரர் இலக்கணவிளக்கச் சூறாவளியின் அவ்விலக்கண விளக்க நூலுமுரையு மியற்றினார் வைத்தியநாத தேசிகரே எனவைத்து மறுத்ததும், வாய்மையன்றாமென மறுத்து மற்றவ்வுரை யியற்றினார் இலக்கண விளக்க நூலாசிரியரது மூத்தபுதல்வரான சதாசிவ நாவலரே யாதல்வேண்டு மெனப் பண்டிதர் மு. வேங்கடசாமி நாட்டார்

அவர்கள் நஞ் செந்தமிழ்ச் செல்வியின் இரண்டாம் சிலம்பு மூன்றும், நான்காம் பரல்களின் எழுதிவிடுத்தனவும், அதனை எதிர் மறுத்துமெனப் புகுந்தாரும், உடன்பாடு காட்டினருமெல்லாம் ஏனைப் பரல்களின் எழுதிப் போந்தனவும் உண்மை யீதெனக்காட்டு மாற்றலிற் றலைசிறந்து நிற்குமாறின்றி ஒன்றினொன்று பெரிது மிகவி மயக்குற்று நிற்றலின், அவ்விகலறுத்து உண்மை காணு மறிவின் மதுகையில்லார் அவற்றின் வாய்மை காணலாற்றாது மயங்கி இடர்ப்படாவண்ணம் அவ்வுரையின் மெய்வரலாறு நிலையிடுமாற்றான் ஈண் டிக்கட்டுரை எழுதப் புகுந்தாமென்பது.

இனி, நண்பர் நாட்டாரவர்கள் இலக்கண விளக்க உரை இயற்றினார் அந்நூலாசிரியரின் வேறுபட்டா ராதல் வேண்டுமெனத் தாங் கருதியதனைச் சாதிப்பான் எடுத்துக்காட்டிய வேதுக்கள்.

'நூற்கு உரையும் பாயிரமும் அணியியலிற் சொல்லணிச் சூத்திரங்களும் வைத்திய நாத தேசிகருடைய புதல்வர் ஐவருள் மூத்தவராகிய சதாசிவ தேசிகரால் இயற்றப் பட்டன எனக் கூறுவாருமுளர்'

என வரும் இலக்கணவிளக்கப் பதிப்புரைக் குறிப்பும்,

'எழுத்திலக்கணம் உணர்த்துகின்றார்' 'இந்நயம் பற்றி இவர் இலக்கணங் கூறுமையின்' 'சார்பின்பாலவென்றார் இந்நூலுடையாரென்றுணர்க'

எனப் பல்லாற்றானும் அந்நூலாசிரியரைப் படர்க்கையின் வைத்தோதுமுறை நடையும்,

'உயிரும் மெய்யும் கூடுகின்ற கூட்டத்தினை எல்லாமெய்யுமென மெய்மேல் வைத்துக் கூறியது அது முன்னர்க் கூறப்படுதல் நோக்கிப் போலும்'

என நூலாசிரியர் செய்கையினை ஐயத்தின்பாற் படுத்தோதும் உரைக் குறிப்பும் என மூன்றும்.

இம் மூன்றனுள் இலக்கணவிளக்கப் பதிப்புரைக் குறிப்பு, அப் பதிப்புரை ஆசிரியராம் சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்களான் ஆண்டே மறுத்தொதுக்கப் பட்டதொன்று மாத லானும், "என் கண்கா ண * * * உரை எழுதினன் என்றெடுத் துக் கூறும் முன்னை ருரைப் பிரமாணத்தின் முன்னொரு நிகரென நிற்கலாற்றாத தொன்று மாதலானும், பிறிதோர் ரேதுவின்றித் தானே தனித்து நின்று அப்பொருள் வலி யுறுக்கவல்ல பிரமாணமாமா றின்மையானும் ஏனை யிரண் டேதுக்களின் முடிபே இதற்குமாமென் றுணர்க. அல் லதூஉம், இலக்கணவிளக்க நூலார் இரண்டாம் புதல்வரா கிய தியாகராச தேசிகர் இயற்றிய அந்நூலின் பாட்டியற் குப் பதிக முரைத்த அவர்தம் மகனார் வைத்தியநாத தேசி கர் அப் பதிக வுரைக்கண் 'இலக்கணங்களைத் தீபமொப்ப விளக்குதலான் இலக்கண விளக்கமென்று பெயர் விளங்க வைத்தியநாத தேசிகன் இந்நூலுரைத்து உரையிட்டு நிலை நிறுத் தினான்' என விளக்கி இருத்தலொன்றே இவர்தம் ஐயமெல்லாம் அறக்களைந்து அவ்வுரையின் மெய்வரலாறு நிறுத்துரைக்கப் போதிய சான்றா யிலங்குதல் காண்க. இதனான் "பொருள்விரித் துரைத்தனன்" என வரும் சிறப்புப்பாயிரத் தொடரும் இப் பொருளே நுதலிற்றுமாறு கண்டுகொள்க.

இனி 'அத்தன்மை யுடையோன் அரிய தவத்தினாற் றிரு வவதாரஞ் செய்த மூத்தபுதல்வனான சதாசிவ தேசிகன் இந்நூற் குச் சிறப்புப்பாயிரங் கூறிச் சொல்லணி இலக்கணமும், தற்பவம், தற்சமம், தேசியமாகிய மூவகைச் சொற்களிற்பட ஆராய்ந்து கூறினான்' எனச் சதாசிவ நாவலர் இலக்கண விளக்க நூலுட் செய்துபோந்ததிவையென வரையறுத்துக்கூறும் இப்பதிகவுரை முன் யாரோசிலர் இயைத்துக் கூறும் புனைந்துரை எழில் பெறு மாறு யாண்டையதென் றொழிக. இப்பதிக உரை இயற்றி னாரும் பதிகமியற்றிய வைத்திய நாததேசிகரேயாதல்

"புலங்கொளப் பாட்டிய லிலங்க வுரைத்தனன்
வாய்மைதரு தியாக ராய தேசிகனே"

என்று மப்பதிகத் திறுதியிரண்டடிகட்குக் 'கேட்குநர்க்கு "அறிவினூறு மமுதெனை நிறையப்" பாட்டிய லிலக்கணத்தை விளங்கச் செய்தான் கிரியை யொழுக்கமும், ஞானவொழுக்க மும், உணர்த்தி என்கண் அவிச்சை நீங்க இன்பமாகிய வீடு பேற்றின் உபாயத்தினை எனக்கு அருளாநிற்குந் தியாகராச தேசி கனென்னும் இயற்பெயரை யுடைய குரவன்' எனத் தாம் பெறு முரிமையனைத்தும் பெய்துரைக்கு மாற்றானும் 'எனக்கு அருளா நிற்கும்' என நிகழ்காலத்தாற் றெளித்துரைத்த வாறும் தெற்றெனத் தெளிந்துகொள்க.

இப்பதிக முரைத்த வைத்திய நாத தேசிகர் இலக்கண விளக்க மியற்றிய வைத்திய நாத தேசிகரின் பெயரர் என்பது 'இப்பதிகச் செய்யுள் செய்தான் வைத்திய நாததேசிகன் மகன் பாட்டியல் பகர்ந்த தியாகராசதேசிகன் மாணுக்கனுகிய புதல்வன் வைத்தியநாத தேசிகன்' என அப்பதிகவுரை இறுதிக்கண்வரும் குறிப்பானுணர்ந்து கொள்க.

இவ்வாறு, நூலாசிரியரின் புதல்வர்தம் புதல்வரான் எடுத் துரைக்கப்படும் நேரிய பிரமாண மொன்றனை யறவே கைவிடுத்து ஆராய்ச்சி செய்துமுடித்தமை "குளிர் பூஞ்சோலை வழியிருக்கக் குழியில் விழுந்தளறு பாய்ந்த" தாமாறு காண்க. இக்காட்டிய வாற்றான் 'பொருள் விரித்துரைத்தனன்' என்னுமச் சிறப்புப் பாயிரத்தொடர் இலக்கண விளக்க நூலாசிரியர்தாமே அந்நூற்கு உரையியற்றினுராதலைக் காட்டவந்ததே யாதலும், பதிகமியற் றிய வைத்தியநாத தேசிகரும் அது கூறிக் கரிப்போக்கினு ராதலும் இனிதின் உரம் பெற்று நின்று அவ்வுரையியற்றினுர் வேறும் ஒருவர் என்னும் கொள்கையை மறுத்தொழித்தமை காண்க.

இனி, இவ்வுரையியற்றினுர் அந்நூலாசிரியரே என்றல் நடுக்கின்றி நிலையுறக் காண்டு மேனும் அவர்தம் முறைபினைப் பிறவினை வாய்பாட்டானேதுதன் முறையன்றுலோ வெனின்? அவ்வாறியற்றுதன் முறையன்று மென்னும் நியதியொன் றுண்டாயினன்றே அது முறை பிறழ்வாவது. அங்ஙனமேது

மின்மையின் அவ்வாறு கடா நிகழ்த்துதலே முறையன்றாமென் றொழிக. இந்நூலின் பாட்டியல் இயற்றி உரை பகர்ந்தாரு மவ் வரோ அவர்தம் உரையினைப் படர்க்கையின் வைத் தோது மாற்றானும், இஃதவர்தந் தந்தையார் இயல்பிற்றாய் அவர் தமக் குப் பரம்பரை வழக்காற் போந்தமை கண்டு கொள்க. இஃதறி யாது அவ்வுரை வைத்தியநாத தேசிகரைப் படர்க்கையின் வைத்தோதுமாற்றான் அஃதியற்றினார் சதாசிவ நாவலராதல் வேண்டு மென்பார்க்குப் பாயிரஞ்செய்வார் இவரென் றெடுத் தோதி, 'அவருள் இப்பாயிரஞ்செய்தார் தன் மாணாக்கராகிய தன் புதல்வர் சதாசிவ நாவலரெனவுணர்க' என்ற வ்வுடையே அவர் தம்மைப் படர்க்கையின் வைத்தோது மாற்றான் அஃ தியற்றினார். சதாசிவ நாவலரின் வேறு பட்டாராதல் வேண்டு மன்றோ எனக் கடாவுவார்க்கு இறுக்குமாறின்மையும் உணர்ந்து கொள்க. இதனான். நூலாசிரியரைப் படர்க்கையின் வைத் தோது மவ்வுரை இயற்றினார் நூலாசிரியரின் வேறுபட்டாராதல் வேண்டுமென்றல் தகர்த் தெரியப்பட்டமை காண்க.

இனி 'உயிரும்மெய்யுங் கூடுகின்ற கூட்டத்தினை எல்லா மெய்யுமென மெய்மேல் வைத்துக் கூறியது அது முன்னர்க் கூறப்படுதல் நோக்கிப்போலும்' என நூலாசிரியர் செய்கையினை ஐயத்தின்பாற் படுத்தோதும் உரைக்குறிப்பே ஈண்டாராய்தற் குரியது. இஃதொன்றே அடிப்படையாக நின்று பண்டிதர் வேங் கடசாமி நாட்டாரவர்களை இவ்விடர்ப்படுத்தி யிருத்தல் வேண்டு மென்றல் யார்க்கும் பொருத்தமாவ தொன்றும். அவ்விலக்கண விளக்க நூலார் இவ்வாறு அந்நூலகத்துச்செய்துபோந்த மயக்க வழூஉக்கள் பலவற்றுள், ஒன்றனை எடுத்து விளக்குவதே அப்போலு மென்னும் ஐயத்தின் புன்மை களைந்து உண்மைப் புலப்படுக்கவல்ல பொருபடையர்மாதலின் அவற்றுளொன்றனை இங்கே தந்து காட்டுதும்.

'எனவே "பெயரும் வினையும் போன்று" எனவும் "முன் னும் பின்னும் வருபவை நாடி" எனவும் யான் கூறிய நெறி யைச் சோராமற் கடைப்பிடித்து, "எச்சொல்லாயினும் பொருள்

வேறு கிளத்தல்'' எனவும் "ஒத்த மொழியாற் புணர்த்தன ருணர்த்த—றத்தமரபிற் றோன்றுமன் பொருளே'' எனவும் என் ஹற் றரப்பட்ட பாதுகாவலாணையாற் "கிளந்தவற்றியலாற் பாங் குறவுணர்க'' என்பது இதன் கருத்தாயிற்று'

என்பது இலக்கண விளக்க உரியியற் புறநடைச் சூத்திர உரையின் ஒரு பகுதியாம். இதனுள் எடுத்துக் காட்டிய சொற் றொடர்தம்முள் "எச்சொல்லாயினும் பொருள் வேறு கிளத்தல்'' என்பதொன்று நீங்கலான எல்லாம், இவ்வியலின் முதலினும் இடையினும் கடையினுங் காணக்கிடக்கின்றன. மற்று "எச் சொல்லாயினும் பொருள்வேறு கிளத்தல்'' என்னும் இஃதிந் நூலகத் தியாண்டுங் காணப்படுவதன்றாய் தொல்காப்பியச் சொல் லதிகார உரியியலிற் றலங்காநிற்கின்றது. இவ்வாறு தம் நூலுட் கூறப்படாத தொன்றனை அவர்தாம் கூறிவைத்தார்போன்று, ஆண்டவ்வுரை வரைந்ததற்குக் காரணம் என்னை என்றாராய்ந்த வழி அவர்தம் மறிவெல்லாம், அந்நூலிற் சூத்திரங்களையும், உரை யாசிரியர் முதலினோர் உரைதம்மையும், ஆண்டவை கிடக்குமாற் றானும், சிதைத்தானும், திரித்தானும், சேர்த்தானும் எடுத்தா ளுஞ் செய்கையிற் றோய்ந்து கிடந்தவாற்றான், தாமதனை இந் நூலுள் எடுத்தாண்டதும் இல்லதும் பிரித்துக்காணும் உணர்வு நிலையிற்றலைப்படாது, அச்சூத்திரத்து ஆசிரியர் நச்சினார்க்கினிய ருரையினை அவ்வாறே தமதாக்கி எடுத்தெழுதியதாற் போந்த இடர்ப்பாட்டின் வழூஉவாமென்ப தறியக்கிடக்கின்றது. இதனை "அன்ன பிறவும்கிளந்த வல்ல'' என்னுந் தொல்காப்பியச் சொல் லதிகார உரியியற் சூத்திரத்து, ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரையோடும் ஒப்புநோக்கி யுணர்ந்து கொள்க. இவ்வாற்றா னொருநூற் குரையியற்றன் ஏனோர்க்குப் பொருந்தாமையும் ஈண்டுய்த்துணர்க. இதனை ஆசிரியர் மாதவச்சிவஞான முனிவரர் தம்மஃகியகன்ற பேரறிவான் அளந்தறிந்து "எச் சொல்லாயி னும் பொருள் வேறு கிளத்தல்'' எனவென்றுற் றரப்பட்ட பாது காவலாணையாலென்றார், இவ்விலக்கணவிளக்க நூலுள் எச்சொல் லாயினும் பொருள் வேறு கிளத்தலென இவராற் றரப்பட்ட

வானை யாண்டையதென்க. தாஞ்செய்த நூன் முறைபற்றி யுரை செய்யாது தொல்காப்பியத்திற் கிடந்தவாறே படியெடுத் தெழுதித் தமதறியாமையை விளக்கினரெனவறிக.''

என இலக்கண விளக்கச் சூறாவளியின் எடுத்து மறுத் தமை படித்துணர்ந்தார்க்கு *' உயிருமெய்யுங் கூடுகின்ற வுயிர் மெய்க் கூட்டத்தினை எல்லாமெய்யுமென்று மெய்மேல் வைத் துக் கூறியது, அது முன்னர்க் கூறப்படுதல் நோக்கிப் போலும்' என்னும் உரையாசிரியர் இளம்பூரணருரையினை இலக் கண விளக்க நூலார் அவ்வாறே தம்முரைக்கட் டந்துரைத் தமையும், தம்மைப் பிறிதோராசிரிய நிலைக்கண் வைத்து உரை வரைந்து வருதலிற் றாழ்ந்து கிடந்த சிந்தை மயக்கினையை தென்னுமென்பது எளிதறியக் கிடக்குமாறறிக.

'' எக்கண்டு பெயருங்காலை '' '' நம் உணர்வில்லாவில்லா நயனில்லோர்'' என நெடுமுதல் குறுகும் விரவுப் பெயர்கள், இனமெல்லெழுத்தாய்த் திரிதற்குரிய மகரந் திரியாது கெட்டு வல்லெழுத்துப் பெற்றனவெனத் தாங் கூறிய செய்கைக் கேற்பக் கூறமறந்து, மெல்லெழுத்துப் பெறுதற் குரியனவல் லெழுத்துப் பெற்றனவென ஆசிரியர் தொல்காப்பியனார் கூறிய அவ்வுரை வாறேவாசகத்தை யெடுத்தெழுதினர்.

எனப்போந்த இலக்கண விளக்கச் சூறாவளியின் ஓட்பமும் ஈண்டைக் கெடுத்துக் காட்டாதல் கண்டு கொள்க. இனி,

''புணர்ச்சிக்கணுயிர் மிகவருஞ் செய்கைக்கு இவரியாண்டுஞ் சூத்திரங் கூறாமையின் ''உயிர்மிக வருவழி யுயிர்கெட வருத லும்'' என்றலும், ஏனையவற்றிற்கும் இவ்வீறு மெல்லெழுத்து மிகும் இவ்வீறுவல்லெழுத்து மிகும் இவ்வீறியற்கையாம் இவ் வீறு சாரியை பெறுமென ஆசிரியர் தொல்காப்பியனார் கூறிய வாறே இவர் தனித்தனி வகுத்துக் கூறாமையின் ''இயல்பின் விகாரமும் விகாரத்தியல்பும்'' என நன்னூலார் கூறியவாறே

* தொல்காப்பியம் எழுத்ததிகாரம் மரபியல் சூ. கஎ.

பொதுப் படக்கூறாது ஆசிரியர் கூறியவாறே வகுத்துக் கூறுத லும், பொருந்தாமையறிக ''

என முனிவரர், இலக்கணவிளக்கச் சூறாவளியி னெடுத்து மறுத்தது, இவ்விலக்கண விளக்க நூலாசிரியர் தம்முரையிற் போன்று நூலினும் செய்து போந்த வழுக்களாமாறு கண்டு கொள்க. இவையனைத்தும் தம்மாலியற்றப்படு மந்நூலினைப் பல்லாற்றானும் அலங்கரிக்க வெண்ணிய அந்நூலாசிரியர், அந்நூ லினும் உரையினும் செய்வான் விழைந்த செய்கைக்குரிய ஆற்றலின்மையாற் போந்தனவா மென்ப தொருதலை. இவ்வாறு இலக்கண விளக்க நூலார் பல்லிடத்தும் மயங்கி வழுவினேந்தும், ஆசிரியர் தொல்காப்பியனார் ஆணைவரம் பிகந்தும், முன்னொடு பின் மலைந்தும் உரைத்தன அளப்பிலவாதல் அந்நூலினை ஒரு முறைமுற்றும் உற்று நோக்கும் இலக்கண வறிவுடையா ரெவர்க் கும் பொள்ளெனப் புலப்படுவதொன்றாம். அதனைத்தெளிதாற் கேற்கும் மதிநுட்பம் வாய்ப்பப் பெறாதார் அவற்றுட்பட்டு மயங் காவண்ணம் பாதுகாத்தற்கெழுந்த பெருங்கருணையின் எதிர்நூ லிலக்கணந் தழீஇ இயற்றப்பட்டதே இலக்கண விளக்கச் சூறா வளியாமென்பது செப்பமுடைய செல்லார்க்கு மொப்பமுடிந்த தொன்றாம்.

இககாட்டியவாற்றான் நூலாசிரியர் செய்கையினை ஐயத்தின் பாற்படுத்தோதும் அவ்வுரையாசிரியர் நூலாசிரியரின் வேறு பட்டாராதல் வேண்டுமென்னும் பண்டிதர் மு. வேங்கடசாமி நாட்டாரவர்களது கொள்கை காழ்ப்பின்றி யூழ்த்தமரமென வடி யொடு முறிந்து வீழ்ந்தமை காண்க.

இவ்வாறழிந்தொழியும் இவ்வேதுக்களின் சொரூப வுண் மையினை அளந்தறியலாற்றாது கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமைப்பாடுடையாராம் ஆசிரியர் மாதவச் சிவஞான முனிவரர் இயற்றியருளிய சூறாவளியினைக் குற்றத்தின்பாற் படுத்தோதத் துணிந்தமை மட்டில் நண்பர் நாட்டாரவர்கள்பாற் பெரிதும் குற் றமே என வற்புறுத்துகின்றேம். இது பெரிதும் கடுமையா

மென்றவர்க்குத் தோற்றுமாயின் அவர்களதனைப் பொறுக்கு மாறும் வேண்டுகின்றேம்.

அறிவு நலனனைத்தும் ஒருங்கே செறிந்து திகழும் நந்தமிழ் நாட்டின் பண்டைத்தண்டமிழ் வாணர் தம்மியல்வரலாறியாதும் சரிதவியல் வழாஅ நெறிக்கண் எடுத்துரைக்கப் பெற்றிலாக் குற்றமொன்றே 'மதிக்கண் மறுப்போலுயர்ந்து விளங்கும்' இக் காலநிலையில் ஒரு நூலினை எடுத்தாராய்வார்க்கு, அந்நூல் தோன்றுங் காலத்துடனிருந்து இஃது இவ்வாற்றான் இயற்றப் பட்டனவாதல் 'நான்என்கண்ணாற் கண்டுவைத்தேன்' எனத் தந் நூலகத்தூத் தந்துரைக்குமெடுத்துக் காட்டினும் மிக்கதொன்று இன்றுமாகவும், அதனையும் ஒரு பொருட்படுத்தாது, நூலாசிரிய ரின் புதல்வர்தம் புதல்வரான் எடுத்துரைக்கப்படும் அந்நூல் வரலாற்றினையும் கண்ணோக்காது, யாவதுங் கற்றோரறியா வறி வினராம் சிவஞான மாபாடியத்தலைவரது செந்தமிழியல் வளங் கறட்டும் செந்நாப் புலமையாற் றெளிந்துரைத்த செம்மையுந் தேர்ந்து தெளியாது, இவ்வாராய்ச்சி செய்துமுடித்து மென்றல் எவ்வாற்றானும் நலம்பயத்தலின்றாம்.

'வைத்தியநாதன் இலக்கண விளக்கம் வகுத்துரை எழுதி னன்' என்றெடுத்துக் காட்டிய சுவாமிநாத தேசிகர் கூற்றுப் பொய்மையுடைத்தாயின், அஞ்ஞான்றே அவ்விலக்கண விளக்க நூலாசிரியராதல் அன்றி அவர்தம் புதல்வர்களாதல் அதனை எடுத்து மறுத்து உண்மை யுரைத்திருப்பார்களன்றோ? இந் நூலின் பாட்டியற்கும் பதிகமுரைத்த நூலாசிரியர்தம் பேரர் தாமும் 'வைத்தியநாத தேசிகன் இந்நாலுரைத்து உரையிட்டு நிலை நிறுத்தினன்' எனக் கூறிப்போந்ததொன்றே அவ்வண்ணம் நிகழ்ந்ததொன்று மின்றுமென்று நிலைநாட்டுகின்றமை கண்டு கொள்க.

இதுகாறும் தருக்க ஜெடிலமாக நிறுத்துரைத்த இவ் விரி வுரையுரன் இலக்கணவிளக்க உரையாசிரியர் அந்நூலாசிரியர் அன்றென்பார் எடுத்துக்காட்டிய ஏதுக்களனைத்தும் மறுப்பட் டழிவுற்றமையின் 'வைத்தியநாத தேசிகரே நூலும் உரையும்

இயற்றினாரெனக் கொண்டு பிறர் மேற்கோள் காட்டியதும் மறுப்புரை வரைந்ததும் பிழையா'மென்பதும் பிழையா யொதுங்கி, இலக்கணவிளக்க நூலாசிரியரா னியற்றப்பட்டதே அவ்வுரையா மென்றும் முன்னோருரைப்பொருள் முற்றும் என்றுங் குன்றா வாய்மையிற் றிரண்டு 'பொற்கோட்டிய' மெனப் பொலிந்து நிற்றல் காண்க.

இனி, இவற்று ளொன்றுதானும் நன்றுணர மாட்டாத இலங்கை ஆறுமுகம்பிள்ளை என்பா ரொருவர் இடைப்புகுந்து 'இலக்கண விளக்க வுரைச் சமாதானம்' என ஒரு பெயரிட்டு, அப்பெயரே தமக்கு இட்டவிகாதஞ் செய்தலுணராது, செந்தமிழ் வரம்பு நிலையிட்ட திராவிடமாபாடியத் தலைவராம் ஆசிரியர் மாதவச் சிவஞான முனிவரார்தம்மைப் பழித்துரைக்கு மாற்றான் நஞ் 'செந்தமிழ்ச் செல்வி' இரண்டாம் சிலம்பின் எட்டாம் பரலில் எழுதிவிடுத்த அனைத்தும் ஆண்டைக் கியைபில்லனவும் மறுதலைப்பொருள் சாதிப்பனவும் அவ்வியாத்திய சம்பவங்கட் கிலக்காவனவுமா யழிவுறுமாறு கற்றுணர்வுடையா ரனைவரும் தெற்றென வுணர்வரெனினும் அவை யங்ஙனமாத லுணராதார் அவற்றினை வாய்மைபோலுமென மயங்கி அவர்க் கினமாய் நின்று அப்பெரியாரைப் பழித்தலாம் உய்தியில் குற்றமுறாஅ வண்ணம் ஈண்டவற்றை எடுத்து நிராகரித்துக் காட்டுதும்.

'கருவி கருத்தா எனவே அடங்குதலின் உடனிகழ்வென வேறு கூறவேண்டாமெனினும் அது மிகுந்துகாட்டலின் வேறு கூறினார்போலும்.' என்றாற்போலும், நூலாசிரியர் செய்கையினை ஐயத்தின்பாற் படுத்துரைக்க நேர்ந்தமை, தம்மைப் பிறிதோ ராசிரிய நிலைக்கண்வைத்து உரை வரைந்தமையாற் போந்தனவா மாறும், அங்ஙனம் வரைந்தது அவர்தம் மியற்கை விருப்பா மாறும் முன்னரே காட்டப்பட்டமை உய்த்துணர்ந்துகொள்க. ஈண்டிவ்வாசிரியர், 'இக்கருத்தே பற்றியன்றே "வினைமுதல் கருவியனைமுதற்றதுவே" என்ற ஆசிரியர் தொல்காப்பியனாரும், மீட்டு உடனிகழ்வு கூறியதூஉமென்பது' என்றுரைத்ததை எடுத்துக்காட்டி 'இவ்வாறு முன்னர்த் தொல்காப்பியனார் கூறிய

தறிந்த பின்னும் ஒருநூல் செய்யுமாசிரியர் ஐயுறவு தோன்றக் கூறினால் அந்நூலை யெற்றுக்கோ அவர் செய்வதும், நாங்கள் படிப்பதும்' எனக் கடா நிகழ்த்துதல், 'இங்ஙனங் கூறுவார்க்கு நூல்செய்து மெனத் தொடங்குதலுங் கூடாதென்க.' எனவரும் சூருவளிக் கூற்றிற்கினைப் நின்று அந்நூலுரையின் அரில்விர விய நிலையினையே உணர்த்துமாறறிக.

'கருவி கருத்தா எனவே அடங்குதலின் உடனிகழ்வென வேறு கூறவேண்டா வெனினும் அது மிகுந்து காட்ட லின் வேறு கூறினார் போலும்' என வாண்டுள்ளவாறே யதனை எடுத்தெழுதவறியாது 'கருவி கருத்தா என அடங்குதலின் வேறு கூறவேண்டாவெனினும் அதுமிகுந்து காட்டலின் வேறு கூறினார்போலும்' என்றெழுதிப் புரைபோயினவாறுங் கண்டு கொள்க.

மற்றும் ஆசிரியர் தொல்காப்பியனார் ஐயப்பொருளை நுதலி வருமிடைச் சொல் இஃதாமென்பது துணர்த்துவார்,

கொல்லே ஐயம்

எனத் தனித்தெடுத்தோதி இப்போலு மென்பதனைக் கட்டுரைச் சுவை படவரும் ஆங்கவென்னும் உரையசையின் பின்வைத்து,

ஆங்கவுரையசை

எனவும்,

ஒப்பில் போலியுமப் பொருட்டாகும்

எனவும் ஓதுதலின் ஈண்டிவ் வுரையிற் பயின்றுவந்த போலு மென்பதனை ஐயக் கிளவியாமெனக் கோடலும் பொருந்தாமை யுணர்ந்துகொள்க.

நீற்றினையு நெற்றிமே லிட்டார் போலும்
நீங்காமே வெள்ளெலும்பு பூண்டார்போலும்
காற்றினையுங் கடிதாக நடந்தார் போலும்
கண்ணின்மேற் கண்ணொன் றுடையார் போலும்

கூற்றினையுங் குரைகழலா லுதைத்தார் போலும்
கொல்புலித்தோ லாடைக் குழகர் போலும்
ஆற்றினையுஞ் செஞ்சடைமேல் வைத்தார் போலு
மணியாரூர்த் திருமூலட் டானனாரே.

என்றற் றொடக்கத்துத் தாண்டகச் சதுரரது தேவாரப் பதிகமும் இப்பொருளிற் பயின்று வருமாறுணர்ந் தடங்குக.

இவ்வுரைக்கு மிதுவே கருத்தாதல், 'கருவி கருத்தா எனவே அடங்குதலின் உடனிகழ்வென வேறு கூறவேண்டா வெனினும் அது மிகுந்து காட்டலின் வேறு கூறினார்போலு மென்பது' என் றுரைத்தாங் கமையாது, 'இக்கருத்தேபற்றி யன்றே "வினைமுதல் கருவியனை முற்றதுவே" என்ற ஆசிரியர் தொல்காப்பியனாரும் மீட்டு உடனிகழ்வு கூறியதூஉ மென்பது' என அப்பொருளின் துணிபு நிறுத்துரைத்தலான் இனிது புலப்படுமாறு காண்க. இங்ஙனம் பல்லாற்றானும் சூழ்ந்து நோக்காது பெரியாருரையிற் கதுமெனக் கதுமெனக் குற்றங் கூறப் புகுதன் சிறுமை தங்குற்றமே கூறிவிடும் என்பதற் கிலக்காமா றுணர்க.

இனி இவர், தோலாநாவின் மேலோராகிய ஆசிரியர் மாதவச் சிவஞான முனிவரர் தெய்வப் பெற்றிமையுணராது தாமவ ரினும் இபற்றமிழ்ப் பொருளிபலறிவு மிக்குடையார் போன்று 'எற்பாடு' என்பதற்கு முனிவரர் நாள் வெயிற்காலை எனப் பொருள் கொண்டது பொருந்துவதன்றுமென மறுக்கப்புகுந்து இரண்டொரு சங்கச் செய்யுட்களை எடுத்துக்காட்டி செய்யுட்க ளனைத்துந் தாம் நினைந்த அப்பரிசே பயப்பனவாமென் றெண்ணி அயர்த்தனர், இது தாம் மேற்கொண்டதனைச் சாதிக்கும் வியாத்தி யுடைத்தாகாமையிற் பிறிதோர்ரேதுவை யுடன்கொண்டு வருத லென்னும் நிக்கிரகத்தானமாமாறு காண்க.

இனி, 'எற்பாடு' என்பது நாள் வெயிற்காலையா மெனக் காட்டிய ஆசிரியர் மாதவச் சிவஞான முனிவரது செம்புலமாட்சி, தொல்காப்பியச் சூத்திரவிருத்திவல்ல நல்லாசிரியரை யடுத்து

வழிபட்டுக் கேட்டுணரு மாற்றலிற் சிறந்த அறிவின் மதுகை யுடையார்க்கே புலனாவதன்றித் தாங்கருதிய பொருளைத்தானும் வழுவின்றி எழுதலாற்றாத வெள்ளறிவினார்க்கு எவ்வாற்றானும் புலனாவதன்றாம். முனிவரர் 'எற்பாடு' என்பதின் எடுத்துக் காட்டிய சொற்பொருள் நுட்பதிட்பங்களும், முன்பின்னுள்ள இயைபும், ஏனைப் பொருளிலக்கண நூற்கருத்தும் என்றின்னோ ரன்னவற்றுள் ஒன்றுதானும் கண்டு தேறாது ஏதேதோ எடுத் தெழுதி அப்பெரியார்ப் பழித்தலாம் உய்தியில் குற்றத்திற் கிலக் காதல் கழுவாயில்லா வழுவர்மாறுணர்க.

'எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்வில்லைப்
பெரியார்ப் பழித்தொழுகு வார்'

என்னுந் தெய்வப் புலவர் திருவாக்கு மிதனை வற்புறுக்குமாறு காண்க. இனி,

'மாலை யாமம் வைகறை யெற்பாடு
காலை வெங்கதிர் காயு நண்பகலெனக்
கைவகைச் சிறுபொழு தைவகைத் தாகும்'

எனவரும் நாற்கவிராச நம்பியாரது அகப்பொருள் விளக்கச் சூத்திரத்து இக்காலத்துப் பெரும் புலவர்களாக விளங்கிய, சுன்னாகம் குமாரசுவாமிப் பிள்ளை அவர்களும், திருக்கோண மலை த. கனக சுந்தரம் பிள்ளை அவர்களும், 'உரைகாரர் மாலை என்பதற்கு "உச்சிக்குப் பின்னும் ஆதித்தன் படுவதற்கு முன் னும் உண்டாகிய காலம்" எனவும், எற்படுகாலை என்பதற்கு "ஆதித்தன் படுகின்றபொழுது" எனவும் உரை கூறினர். அவ் வுரை பொருந்தாமை தொல்காப்பியச் சூத்திர விருத்தியால் இனிது புலப்படும். எற்படு, என்பது காலை என்பதனை நன்கு புலப்படுத்த வந்த அடைமொழி. எற்படுகாலை—சூரியன் தோன் றுங் காலை. எல்—சூரியன், படுதல்—தோன்றுதல்.'

என அப்பழய உரையினை மறுத்துப் புத்துரை வகுத்து விளக்கியது, ஆசிரியர் மாதவச் சிவஞான முனிவரர். ஆசிரியர்

ஒல்காப் பெரும்புகழ் தொல்காப்பியனாரது கருத்துணர்ந் துரைத்த அம்மெய்யுரை மாட்சியுணர்ந்தேயா மென்பது அறிந்து கொள்க.

> ‘ திணைமயங் குறுதலும் கடிநிலை யிலவே
> நிலனொருங்கு மயங்குத லில்லென மொழிப
> புலனன் குணர்ந்த புலமை யோரே’

எனவும்,

> ‘உரிப் பொருளல்லன மயங்கவும் பெறுமே’

எனவும் வரும் தொல்காப்பிய அகத்திணையியற் சூத்திரங்களை யாதல் உரையாசிரியர் இளம்பூரண வடிகளும் ஆசிரியர் நச்சினார்க்கினியரும், அச்சூத்திரங்கட்கு உரைத்துப் போந்த விழுமிய நுட்பவுரைகளை யாதல் கண்டானும் கேட்டானு மிருப்பின் “கானன் மாலைக்கழிப்பூக்கூம்ப” என்னு மகப்பாட்டினையும் நெய்தற் கலியுட் சிலவற்றையு மெடுத்துக் காட்டி ‘இப்பாக்களை நெய்தலிற் கோத்த புலவோனினும் மிகுந்த பெலவானோ இவர்’ எனக் கடா நிகழ்த்திக் களியாட்டயரார் என்ப தொருதலை. தொல்காப்பியத்தினை நல்லாசிரியர்பாற் கேட்டதின்றேனும், நெய்தற்கலியுட் சிலவற்றை எடுத்துக் காட்டிய இவர் அந்நெய்தற் கலியின் முதற் செய்யுளுரையிற்றானே “திணைமயங்குறுதலும்” என்னுஞ் சூத்திரத்து “நிலனொருங்கு மயங்குதலின்று” என்றதனாற் காலமோருங்கு மயங்குமென்றது கொண்டு சான்றோர் பலருஞ் செய்யுள் செய்தார். “கானன்மாலைக் கழிப் பூக்கூம்ப” என்னும் அகப்பாட்டு நெய்தற்கண் மாலைவந்தது “தொல்லூழிதடுமாறி” என்னும் நெய்தற் கலியுட் கங்குலும் மாலையும் முன்பனியும் வந்தவாறு காண்க. இந்நிலத்து மாலைவந்த பாட்டுக்கள். பலவுள. பிறசான்றோர் செய்யுட் களுட் காலம் மயங்குமாறு பலவும் கண்டுகோள்க’ என ஆசிரியர் நச்சினார்க்கினியர் விளக்கி இருத்தலைத்தானும் காணுமை நோக்குவார்க்கு இவர் காட்டிய செய்யுட்கள் “கற்றதூஉ மின்

றிக் கணக்காயர் பாடத்தாற் பெற்றதா"மாறு இனிது புலனுதல் காண்க.

இந்நிலையில் நின்றயருமிவர், திராவிடமாபாடிய மளித்த செம்புலச் செல்வராகிய ஆசிரியர் மாதவச் சிவஞான முனிவரர் தம்மைக் *"கனவிபாடொடு பகல்செல" என்றதற்கு இவர் என்ன பொருள் கண்டாரோ? எனக் களிமிகுத் துரைத்தல் "கூவலாமை குரைகடலாமை கூவலோ டொக்குமோ கடல்" என விளையது போல்வதொரு களிமயக்குரையாமா றுணர்க. இன்னோரன்ன வெல்லாம் காலமயக்கின்பாற்படுத்து அவிரோத நயஞ்செய்து காணும் ஆற்றல் ஒரு சிறிதும் வாய்ப்பப் பெறாத இவர் 'இம்முனிவர் சொல்வதையே கொள்ளின் சங்க நூற்களை எல்லாம் சுட்டெரியச் சொல்லுகிறீர்களா * * * தமிழ்த்தாய்க்கு உயிரொடு சந்தனக் கொள்ளிவைக்கச் சொல்லுகிறீர்களா * * * என்ன பரிதாபம்' எனச் செந்தமிழ் மகட்கு சந்ததம் தொண்டு பூண்டு தாமம் முனிவரினும் பெரிதுழைத்த பெரியார் எனப் பிரலாபித்தல் அஞ்ஞான விலாச அரண்ணியருதிதமே யாமென்பது தெளியக் கிடந்தவா றுணர்க.

" கானன் மாலைக்கழிப்பூக்கூம்ப" என்னும் நீர் எடுத்துக் காட்டிய அகப்பாட்டினை நும்மனோர் கூறும் எற்பாட்டுப் பொருளின் அமைத்துக்காட்டுக எனக் கடாயினோர்க்கு இறுக்குமா றறியாது விழிக்கு நீராகிய இவர் ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வித் தீந்தமிழ்ப் புலவர் தெளிந்துரைத்த பொருளிலக்கணப் பகுதியின் நுண்பொருட் பரப்பெல்லாம் இனி தாராய்ந்து நிரம்பி முதிரப்பெற்ற பேரறிவுடைய பெருமக்களான் அறிந்து வழிபடற் பாலராகியிலங்கும் செந்தமிழியில் வரம்பு நிறுத்த தண்டமிழ்ப் பேராசிரியராம் ஆசிரியர் மாதவச் சிவஞான முனிவரர் தம்மை,

† "காலை யார்வதறியார்
மாலை யென்மனோர் மயங்கியோரே"

---

* நெய்தற்கலி கரு ஆம் பாடல்

† நெய்தற்கலி 2 ஆம் பாடல்.

என்னும் நெய்தற் பாட்டிலுள்ள இவ்வீரடியையும் யாரோ சொல்லக் கேட்டுவிட்டார் போலும்' என்றெடுத்தியம்பியது நல்லறிவுடையரான் எள்ளற்பாலதா மெனவிடுக்க.

அகநானூறு தொகுத்தாரும், கலித்தொகை தொகுத்தாரும் இருவேறு பெரும்புலவர்களாமாகவும், அவ்விரு நூற்களி னிருந்தும் செய்யுட்களை யெடுத்துக் காட்டியவாற்றான் 'இச்செய் யுட்களை நெய்தலிற் கோத்த புலவோரினும்' என்றெழுதுவதே மரபாமாகவும், அதுதானுமறியாது 'இச்செய்யுட்களை நெய்தலிற் கோத்த புலவோனினும்' என்றெழுதி இழுக்குறாஉம் இவர் 'பிள்ளையவர்கள் முனிவர் மிகுந்த நுண்ணறிவும் நூலாராய்ச்சி யும் உடையவர் என்று சொல்லியதும், அதனால் அவரிடத்தில் மிகுநம்பிக்கை கொண்டு மறுப்பெழுதத் துணிந்ததும் வீணே' எனவஞ்சாது துணிந்தெழுதி வழிவழி நிற்கும் பழி பெரிது மாக்கிக்கொண்டமை, தாம் ஆசிரியராக விளங்கும் சைவப்பிரகாச வித்தியாசாலைக்கு இனி இவர் செய்வான் விழையும் அறப்பெருந் சைவமங்கலத்திற்கு அறிகுறியே போலும்.

இனி, இவர் எடுத்துக்காட்டிய போலி இலக்கண வித்து வான் பொய்வரலாறு கற்றோரவைக்களத்தியாண்டும் இடம் பெற மாட்டாவென்பதும் ஈண்டைக்கெவ்வாற்றானும் எடுத்துக்காட் டாதல் செல்லாதென்பதுவும் கல்லாதானொட்பங்கழிய நன்றாயி னும் அளவைக்கிலக்காகா அசம்பவமா மென்பதுவும் வல்லார் வாய்க் கேட்டுணர்க.

'கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்'

என்னுந் தேவர் திருவாக்கு இவர்க்கு உன்பாடில்லை போலும்.

'நூலாசிரியர் வைத்திய நாத நாவலரே உரைசெய்த போதும், தாமுரை செய்ததென்றும், தம்மாலுரை செய்யப்பட்ட தென்றும், பின்னுள்ளோர் கூறுவது தமக்குந் தமிழ் மாதாகிய தந் தாய்க்கும் அழகல்லவென்று நினைத்தாவது படர்க்கையாற்

கூறி அப்புகழார்கிய சொத்தை வேறு பிள்ளைக்குங்கொடாது தம் புதல்வராகிய சதாசிவ தேசிகருக்கு முதுசொம் ஆகக் கொடுத்தாரென்று கொள்வதூந் தகுதியாகும்' என இவ்வாறெழுதி யபசாரப் படவல்லார் பிறிதொருவரை யாண்டுங் காண்டலரிதாம். இது தானெடுத்துக்கொண்ட மேற்கோளை சாதிக்க மாட்டாமல் அதற்குக் கேடுவரப் பேசுதலென்னும் நிக்கிரகத்தானமாமாறும், 'இவ்வுரைவழக்கு முடிவு என்னவோவென்று நண்பர்கள் கேட்கின், உரையாசிரியர் நூலாசிரியரன்று சதாசிவ நாவலரென்றே துணியக் கிடக்கின்றது' எனத் தாமே முற் கூறியதனை நோக்கப் பூர்வாபரவிரோதமா மாறும் கண்டுகொள்க.

'யாம் இலக்கண விளக்கத்தையாவது வேறிலக்கணங்களை யாவது (நன்குயப்) படித்தேமு மல்லேம், எள்ளளவேனும் விளங்கினேமு• மல்லேம்' எனக் கையெழுத்திட்ட இவர்தம் எழுத்துச் சொற்பொருட் குற்றங்களும் இழிசினர் வழக்கு விராய்வரும் குழறுபாடுகளும் விரிப்பிற் பெருகுமாகலின் இவ்வுரைத்தவாறு பற்றி யவற்றினை யாண்டாண்டுய்த் துணர்க.

'கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்'

கலைதேர் நமச்சிவாயகுரு கருணைக்கடலிற் றிளைத்தாடிக்
கலகப்பாசத் தருக்ககற்றி காமத்தறியை யறவீழ்த்தி
யலையுஞ்சமயத் தருக்களைக்கீ ழடிவேரொடு மகழ்ந்தெரிந்திட்
டருளின்படாத்தை முகமேற்கொண் டாதிவேதாக மங்களென்னுந்
தொலையாமணிக ளிருமருங்குந் தொனிப்பச்சைவ மதம்பொழிந்து
துங்கமோடு முலகமுற்றுஞ் சுற்றும்வெற்றி வாரணமே
மலையாதருளு முனிவர்சிகா மணியேவருக வருகவே
வளமார்துறைசைச் சிவஞான வள்ளால்வருக வருகவே.

பா. கண்ணப்ப முதலியார்,
தமிழ்ப்புலவர்.

---

# "ஓர் உருத்திராக்கமணி"

(சஉகூ-ம் பக்கத் தொடர்ச்சி)

இஃது இவ்வாறு இருக்கையில் அங்கு ஒரு அசட்டுத் தேசாந்திரிப் பிராமணன் கஞ்சாக் குடிக்க வந்து சேர்ந்தான். உக்காவை வாங்கி ஒரு முறை நன்றாக இழுத்தான். தரையில் உட்கார்ந்தான். பைராகி கழுத்தில் நான் பிரகாசித்துக்கொண்டிருப்பதைப் பார்த்தான். என்னைக் கண்டு பெரிதும் ஆசைப்பட்டான். கோடிக்கரையில் தானம் வாங்கி இடுப்பில் சொருகியிருந்த ஐந்து ரூபா நோட்டைக் கொடுத்து, என்னைப் பைராகியினிடமிருந்து பெற்றுக்கொண்டான். புறப்பட்டான் சத்திரத்திற்கு. முதல் பந்தியில் முதல் இலையில் உட்கார்ந்து சாதம் பருப்பு நெய் குழம்பு ரசம் முதலியவற்றை ஒரு வாங்காக வாங்கினான். சோம்பேறிகள் சாப்பிட்டுவிட்டுச் சூதாடுதற்காகக் கொடுக்கும் தக்ஷிணையையும் வாங்கிக்கொண்டான். ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தான். அங்கு வந்திருந்த பிரயாணிகளிடத்தில், சிறிது யாசகம் வாங்கித் தக்ஷிணைப் பணத்தையும் சேர்த்து மதுரைக்கு ஒரு பிரயாணச் சீட்டு வாங்கினான். வண்டியில் ஏறிச் சம்பமாக உட்கார்ந்துகொண்டு பீடியொடு பந்தயம் போட்டுக் குடித்துக்கொண்டிருந்தான். மூக்கிலும் கண்ணிலும் புகை வரும்படி வித்தைகள் காட்டினான், வெகு வேடிக்கையாக ஊர்வம்பு அளந்துகொண்டு பொழுதைப் போக்கினான். மதுரைக்கு வண்டிவந்து சேர்ந்தது. ஒருவன் கால் பூட்சுகளை மறந்து போட்டுவிட்டு, வண்டியிலிருந்து இறங்கிப் போய்விட்டான். இவன் அவைகளை எடுத்துச் சவுட்டாரவாக மாட்டிக்கொண்டு, 'டக் டக்' என்று பிளாட்பாரத்தில் நடந்து சென்றான். வெளியே வந்து அங்குமிங்கும் சுற்றிப்பார்த்து, நாட்டுக்கோட்டைச் செட்டியார் ஒருவரைக் கண்டுபிடித்தான். அவரிடத்தில் விபூதி குங்குமத்தை, "வெகு க்ஷேமமாக இருக்கவேண்டும்" என்று ஆசீர்வதித்துக் கொடுத்து, "இப்பொழுதுதான் இராமேச்சுரத்திலிருந்து வருகிறேன். காரைக்குடிக்கு ஒருமோட்டார்ப் பிரயாணச்சீட்டு வேண்டும்" என்று பல்லைக்காட்டினான்.

அவரும் ஏழைப் பிராமணன் என்று ஒன்றை வாங்கிக்கொடுத்தார். ''மகாராஜனாக சர்வ சம்பன்னனாக மங்களமாக இருக்கவேண்டியது'' என்று ஆசிர்வதித்துவிட்டு, மோட்டாரில் ஏறி முதல் வரிசையில் உட்கார்ந்துகொண்டான். காரைக்குடி வரும் வரையில், அவன் போனது, வந்தது, சந்திரத்துச் சாப்பாட்டு முறுக்கு ''முதலிய பல சங்கதிகளைப் பற்றிச் சரமாரியாகப் பேசிக் கொண்டிருந்தான். காரைக்குடிக் கல்லுக்கட்டி ஊருணிக்கரைக்குக் (motor car) கார் வந்து சேர்ந்ததும், கீழே இறங்கினான். பிரயாணச் சீட்டுக் கொடுக்கிற பையன்கள் எல்லோரும், ''பிராமணார்த்தம் முத்தண்ணா! வங்குவற்றிச் சுப்பண்ணா!! எப்பொழுது வந்தீர் ?'' என்று விசாரித்தார்கள். அப்பொழுதே என்மனம் திடுக்கிட்டுப் போய்விட்டது. ''என்னடா? இந்த அஷ்டத் தரித்திரனையடைந்தோமேயென்று பெரிதும் வருந்தினேன். என் செய்வது ? தாலிகட்டிக் கொண்டு விட்டால், பிரிகிறபொழுது தானே பிரிதல் வேண்டும் என்று பேசாது இருந்தேன். நமது பிராமணார்த்தம் முத்தண்ணா காரைக்குடியில் வெகுநாட்டமான ஆள். நல்ல டாம்பீகமான பேர்வழி. சிறந்த பேச்சாளி. பார்ப்பாரினும் பார்ப்பான்; எல்லோரையும் ஏமாற்றப் பார்ப்பான். இல்லாததை உண்டு என்றும், உள்ளதை இல்லை யென்றும் ஒரே வீச்சாக வீசிப் பல சுலோகங்கள் சொல்லிச் சாதித்து விடுவான். எங்கே பிராமணார்த்தம் என்றாலும் முதல் இலை முத்தண்ணாவுக்குத்தான். பூரிவாங்குவதில் தேர்ச்சி பெற்றவனும் நமது முத்தண்ணா தான். இரண்டுகைகளையும் நீட்டி இரண்டு பேர்வழிகளுக்குரிய பணங்களைப் பெற்றுக்கொண்டு விடுவான். தெரிந்தாலும் பிராமணன் என்று ஒருவரும் அடிப்பது இல்லை. எனவே, அவனுக்கும் ஆசை குறைவதில்லை! கல்யாண மேளம் வாசித்தாலும் முத்தண்ணா வந்து முன்னே நிற்பான். 'ஊரிலே கல்யாணம் மார்பிலே சந்தனம்' என்ற பழமொழி இவனுக்குத்தான் சரியாகப் பொருந்தும். சாக்கொட்டுக் கொட்டினாலும் முத்தண்ணா, சபிண்டியில் ஏகோத்திஷ்டத்திற்கு முன்னெச்சரிக்கை செய்வதற்காக வந்து தயாராக நிற்பான். மிகமானங் கெட்டபிழைப்பு! எனக்கே

பெரு வெட்கமாக இருந்தது! அரைக் காசுக்கு விதியற்ற அவன் செய்கிற தடபுடல்களைப் பார்க்க எனக்கே சகிக்கவில்லை! கும்பாபிஷேகம் என்றால், குதித்துக்கொண்டு, விபூதிப்பட்டை சாத்திக்கொண்டு, ஓமகுண்டத்திற்கு நேரே வந்து உட்கார்ந்து விடுவான்! நோயாளிகள் வீட்டில், எருமைக்கடா தானம், நூற்றுக்கணக்கான ரூபா பொதிந்த பூசணைக்காய்தானம், இருப்புச்சட்டி எண்ணெய்தானம், முதலியன செய்கிறார்கள் என்றால், வாங்குவதற்குத் தைரியமாக நமது சபிண்டிவாலா முத்தண்ணாதான் முன்னிற்பான். செட்டிமார் நாட்டின் இரத்தமாகிய பணத்தை வாய் கூசாது உறிஞ்சும் கொழுத்த மூட்டுப்பூச்சி இவன்தான். இவனை விட்டுப் பிரிய எனக்கும் ஒரு ஆண்டு ஆயிற்று. ஒருநாள் சொக்கனேந்தல் சத்திரத்தில், நமது முத்தண்ணா மூக்குப்பிடிக்கச் சாப்பிட்டு விட்டு, ஊருணிக்கரையிலுள்ள மாமரத்தடியில் துணியை விரித்துத் திருப்புத்தூர் சாத்திரியாரொருவருடன் சீட்டுப் போட்டுக் கொண்டிருந்தான். பணயமாக வைத்ததில், கையிலிருந்த பூரிக்காசு முழுவதும் சரியாகப் போய்விட்டபடியால், என்னைவைத்துச் சீட்டுப் போட்டான். சாத்திரியார் அதிர்ஷ்டம் அவன் தோற்றுப்போனான். நானும் சாத்திரியார் கழுத்தில் போய்ச் சேர்ந்தேன். இன்னும் என்னுடைய சாதகபலன் நல்ல நிலையில் இல்லை. அந்த சாத்திரியாரும் ஒரு பெரிய பிராமணார்த்தப் பேர்வழிதான். அவர் பெயர் அஜகண்டக சாஸ்திரியள் என்பதாகும். அவர் வேலையாதெனில், ஊர்முழுவதும் யாசகம் செய்து, பணஞ்சேர்த்து, ஆட்டுக் குட்டிகளை வாங்கி, குண்டலப் பிராமணர்களைக் கூட்டி வைத்து, அவைகளைச் சித்திரவதைசெய்து, கறித்துண்டுகளையெடுத்து, நெருப்பில் காய்ச்சி ரவா உப்புமாவில் கலந்து உருட்டி ஓரே விழுங்காக விழுங்குவதுதான். வெளிக்கு, 'யாகம் உலக க்ஷேமம்' என்று சொல்லி, தன்னை மேலும் யாககர்த்தா என்று எல்லோரும் போற்ற வேண்டுமெனப் பிரசாரஞ் செய்வது. இந்த ஆட்டுச் சாத்திரியை விட்டுப்பிரிவது எப்பொழுது என்று பெரிதும் ஏங்கியிருந்தேன். ஒருநாள் அவர் வீட்டில் சாப்பாட்டுக்கு அரிசியில்லை. அதனால் அவர் என்னை ஒரு காசுக்கடைக்கார

னிடத்தில் பத்துரூபாவுக்கு விற்று விட்டார். நானும் அக்கசுக் கடைக்காரனிடம் ஒருவாரம் வரை இருந்து, அவனுடைய புரட்டு உருட்டுக்களையெல்லாம் நன்கு தெரிந்து கொண்டேன். திருடர்கள் ஐம்பது ரூபா பெறக்கூடிய பொருள்களைக் கொண்டு வந்தால், ஐந்து ரூபா கொடுத்து வாங்கி, உடனே பொருளின் வடிவத்தை மாற்றிவிடுவான். விலைக்குவரும் தங்கத்தை உரைகல்லில் அழுத்தமாக உரைத்து மாற்றைக்குறையக் காட்டுவான். அவன் என்னை நன்றாக அழுக்கெடுத்துக் கடுகெண்ணெய்போட்டு மினுக்கி, ஒரு ஜெர்மன் சில்வர் டப்பியில் வைத்துப் பலரிடத்தில் கொண்டுபோய்க் காட்டினான். முதலாவது ஒரு M. L. C. செட்டியாரிடத்தில் காண்பித்தான். அவர், "கர்நாடகம்! உத்திராட்சம் யாருக்குத் தேவை? பிள்ளைமார் தெருவுக்குப் போ! போ! வைரமிருந்தால் கொண்டுவா" என்று விரட்டிவிட்டார். பிள்ளைமார் தெருவில் வக்கீல் பிள்ளை யொருவரிடத்தில் காட்டினான். அவர் புதிதாக இங்கிலாந்திலிருந்து தொப்பென்று குதித்தவர். எனவே அன்னார், "Dam! இந்தச் சனிக் கொட்டை எதற்கு? வைதிக அசடுகளிடத்தில் கொண்டுபோய்க் கொடு! நிற்காதே! போ!" என்று துரத்திவிட்டார். பின்னர் திவான்பகதூர் சாஸ்திரிகள் ஒருவரிடத்தில் காட்டினான். அவர், "ஓ! ருத்ராக்ஷம்! வேண்டாம்! வேண்டாம்!! ஆண்டி பரதேசிகளைப் பார்த்துக் கொடு" என்று கூறி அனுப்பிவிட்டார். அடுத்தவீட்டில், இங்கிலாந்து தேச சரித்திரத்தை உருப்போட்டுக் கொண்டிருந்த ஒரு B. A. வகுப்பு மாணவனிடத்தில் காண்பித்தான். அவன் ஆங்கிலக் கல்வி கற்றுக்கொண்டிருப்பவனாதலால், "What is this? Ruk-thra-ksham! This is the nut of a tree in Nepal. This costs Rs. 50! Throw it away into the gutters." (இஃது என்ன? ருக்-தரா—க்ஷம்! இது நேபாள தேசத்திலுள்ள ஒரு மரத்தின் கொட்டை. இதன் விலை ரூபா ஐம்பது! சாக்கடையில் வீசியெறி!) என்று கழறிவிட்டான். வியாபாரிக்கு ஆங்கிலம் புரியாததால் பேசாது போய்விட்டான். சிலநாட் சென்றபின்னர், போஜன்பட்டி ஜமீன்தாரிடத்தில் கொண்டுபோய் விற்றுப் பணத்தைப் பெற்றுக்கொண்டான். இப்

பொழுது நான் ஜமீன்தார் இல்லத்தில் உறைந்து கொண்டிருக்கின்றேன். அவர் என்னைத் தான் அணிந்து கொள்ளுதற் பொருட்டு வாங்கவில்லை! ட்ருக்கர்வது சுவாமியார்களுக்குக் கொடுக்கலாம் என்றுதான் வாங்கினார். பொதுவாக அவர் மிக நல்லவர் தான். ஆனால் அவரிடத்தில் ஒரே ஒரு பெருங்குறை மட்டும் உண்டு. அதாவது புலால் உண்டலில் அவரோடு வேறொருவரும் போட்டி போடமுடியாது. ஒவ்வொருநாளும் இருபது முப்பது வகையான உயிர்ப் பிராணிகளைக் கொன்று விழுங்குவார். அதனாலே தான் உயர்ந்த உருத்திராக்கமாகிய என்னைக் கட்டிக் கொள்ள அவர் விரும்பவில்லை! அவர், எனக்கு இருபக்கங்களிலும் வைரக் கற்கள் இழைத்த தங்கவில்லை பிடித்து, கும்பகோணம் சித்திரச் சங்கிலியில் கோத்து என்னைக் கொண்டுபோய், திரு அக்கிரமபுரிச் சுத்தாத்துவித சைவசித்தாந்த மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுந்தர தேசிகரவர்களைக் கண்டு மகிழ்ந்து, காணும் மரியாதைப் பொருளாகக் கொடுத்தார். பதில் மரியாதையாகக் கும்பகோணம் சால்வைகள் பெற்று மகிழ்ந்தார். பின்னர் சந்நிதானத்துடன் சிறிது நேரம் இன்னுரையாடிக் கொண்டிருந்துவிட்டுப் போய்விட்டார். நான் ஜமீன்தாரிடத்திலிருக்கும் வரை சில நாட்கள் ஓய்வு பெற்றிருந்தேன். நிதானமில்லாத சந்நிதானத்தை அடைந்தும் பழைய துன்பங்கள் தோன்றிவிட்டன; நான் அவர் கழுத்தில் ஏறியது, அவருக்கு அழகாக இருந்ததேயொழிய, எனக்குப் பெருந்துன்பமாகவே இருந்தது. அவர், ஒரு நாளைக்கு இரண்டு வேளை வடை, பாயாசம், அப்பளம், சித்திரான்னம், லட்டு, ஜிலேபி, பதிர்பேணி, அல்வா முதலியவைகளுடன் மூக்குப்பிடிக்க இருத்துவார். காலையிலும் மாலையிலும் பலகார வகைகளில், இருபத்தைந்து வகை உள்ளே தள்ளுவார். ஒருவெள்ளிக் கூஜா நிறையக் காப்பி குடிப்பார். பத்தாததற்குப் பழவகைகளை வேறு டஜன் டஜனாக உட்கொள்ளுவார். இரவில் பக்கா்வுக்கு இரண்டு படி பால் காய்ச்சி வற்றவைத்துக் குங்குமப்பூப் போட்டுக் குடிப்பார். அப்படிச் சதா ஆகாரம் உட்கொள்ளுவது, கழுத்திலிருந்த எனக்குப் பெருந்துன்பமாக விருந்தது. இரவெல்லாங்

கண்விழித்து வேசையரோடு தவயோகம் பயில்வார். சோர்வு நீங்குதற்பொருட்டுத் தங்கக் கிண்ணத்தில் அரை அவுன்ஸ் போர்ட்வொயின் வார்த்து அருந்துவார். ஆனந்தக் கூத்தாடுவார். பாடுவார். பிரமானந்த வெள்ளத்துட் டிளைத்து நிற்பார். அவர் அப்பா நெற்றிவியர்வை நிலத்தில் விழ உழுதுபயிரிட்டுச் சம்பாதித்த பணமாக இருந்தாலன்றோ சிறிதாவது வருத்தந் தெரியும்! மடத்துச் சொத்து அநந்தரவார்சு ஆகையால் தேவடியாள் வீட்டுச் சொத்துத்தானே! இவ்வாறு, அழகும் இளமையு முள்ள தடியர்களை யெல்லாம் திருமடங்களுக்குப் பிள்ளை கூட்டுவது, பண்டைநாளில் அரசர் பெருமக்கள் நன்கொடையாக ஈந்த நற்பொருளையெல்லாம் அழித்துத் திருமடத்தை வெறுமடமாக்கிப் புனுகு எடுக்கும் கொலைக்கள மாக்குவதற்குத்தானே! அந்தோ! பரிதாபம்! பரிதாபம்!! நமது சுந்தர தேசிகரவர்கள் ஒவ்வொருநாளும் மயில் குயில் கிளி அன்னம் போன்ற அழகிய புதுப்புதுக் கன்னிகைகளை வரவழைப்பார். அவர்பாடு பெருவேட்டைதான், ஜீவன் முக்தி பெற்று மகிழ்வதாகக் கருதிக் களிப்பார். மடத்துப் பொருள்களையெல்லாம் வாரி வாரி அம் மடமாதர்களுக்கு நல்குவார். அவர்களுக்கு உள்ளங்கால் முதல் உச்சிவரையில் அழகிய வைரநகைகள் அணிவித்து மலர் மாலைகள் புனைவித்துச் சிங்காரித்துக் கண்டுகளிப்பார். நமது சந்நிதானத்தின் களியாட்டம் ஏட்டில் எழுத அடங்காது. நான் அவரைப் பிரியு நேரமும் நண்ணிவிட்டது. ஒருநாள் கேளிக்கைகளை நுகர்ந்து, சந்நிதானம் அயர்ந்து வாயில் மொய்க்கும் ஈத் தெரியாமல் குறட்டைவிட்டு உறங்கும்பொழுது, நலியாமல் தவசிப்பிள்ளை வைரக் கெவுட்டைக் கழற்றிக் கொண்டுபோய், ஒரு தங்கவேலைக்கார ஆசாரியினிடத்தில் விற்றுவிட்டான். அவன் தங்கத்தையும் வைரத்தையும் வேறுபடுத்தி ஒரு செல்வற்கு விற்று, என்னைமட்டும் ஒரு கயிற்றில் கோத்துக் கழுத்தில் அணிந்து கொண்டான். அவன் பெருஞ் செலவுகாரன். நாடகக் கொட்டகை, மஞ்சிவிரட்டுப் பொட்டல் முதலியவைகளை யெல்லாம் குத்தகையெடுத்தது போல், தவறாமல் விஜயஞ் செய்வான். பையில் பணமின்மையால், ஒரு நாள் மஞ்சிவிரட்டிற்குப்

போவதற்காக, என்னை ஒரு பூசாரிக்கு விற்று விட்டான். இப்பொழுது நான் பூசாரிகழுத்தில் விளங்கிக் கொண்டிருக்கிறேன். இன்னும் எத்தனை மஹான்கள் என்னை அணிந்துகொள்ளப் போகிறார்களோ? தெரியவில்லை! அந்தப் பூசாரி ஒருமருளாடி. நாள்தோறும் சுவாமியாடுவான். "ஹா' வென்று கதறுவான். "நல்ல கறுப்பனுக்கு நாலாறு சூலாடு கொடடா!" என்று கூவுவான். காளிகறுப்பன் பெயரைச் சொல்லி ஆயிரக்கணக்காக ஆடு கோழிகளை வதைக்கச் செய்வான். இதற்கு முன்னர் என்னை ஆதரித்தவர்களைக் காட்டிலும், இவன் பெருங் கொலைகாரனுக ஆய்விட்டான். இந்தச் சண்டாளப் பாவியைவிட்டுப் பிரிய வேண்டுமென்று பெரிதுந் துடித்துக் கொண்டிருந்தேன். ஒருநாள் அவன் கறுப்பர் கோயிலில் தலை விரி கோலமாய்ச் சுவாமியாடும்பொழுது நான் அறுந்து கீழே விழுந்து விட்டேன். அவனும் சுவாமியாடி விட்டு ஆட்ட வெறியில் என்னைப் பார்க்காமல் வீட்டுக்குப் போய்விட்டான். அடுத்த நாள் என்னை ஆங்கு ஒரு சிறுவன் கண்டெடுத்துப் பக்கத்து ஊரிலுள்ள ஒரு தமிழ்ப் புலவரிடத்தில் கொடுத்தான். அப்புலவர் பொறுமையே வடிவமாகவுள்ளவர். யார் என்ன சொன்னுலும் எதிர்த்துச் சொல்லிக்கொண்டேயிருப்பார். நன்மை தீமை பகுத்துணரார். ஒருவர் ஒரு சொற்பொழிவு செய்தால், ஒரு பாட்டுப் பாடினுல் ஒரு கட்டுரை எழுதினுல் அவர் நெஞ்சு பொறுக்காது. தான் அவைகளை மேற் கொண்டு மகிழ்தற்கு உலக ஞானமுந் தெரியாது. ஆனுல் வழக்குப் பேசமட்டும் நன்றாகத் தெரியும். இந்தப் பொறுமைப் பேர்வழி நல்ல வேளையாகச் சிலநாட்களில், என்னைச் சாம்பசிவநகரம் திருக்கோயில் தருமகருத்தா தொந்தியாபிள்ளை யவர்களிடத்தில் ஒப்புவித்தார். இந்தப் பேர்வழியும் எனக்குப் பிடியாதவராகவேயிருந்தார். ஏனெனில் அவருடைய வயிறு மிகப் பெரியது. இதுவரையில் அப் பக்கா வயிற்றில், ஆயிரம் பட்டைச் சாதங்களும், ஐயாயிரம் வடைகளும் அப்பங்களும் ஆறு எழு திருக்கோயில்களும் அடங்கியுள்ளன. அவர் கஷ்டப்பட்டு வேறொரு தொழில் புரியாமல், தருமகருத்தாவாக விருந்தே காலக்ஷேபம்

செய்துவருபவர். அவர் ஒருநாள் திருநெல்வேலியில் தாம்பிர பர்ணியாற்றில் குறுக்குத்துறையில் குளிக்கும் பொழுது, நான் கீழே நழுவி விழுந்து விட்டேன். எளியேன் நல்ல வேளையாக மணலுக்குள் நுழைந்து சிவபூஜைபுரியும் வேதிகைக்குப் பக்கத்தில் ஒளிந்து கொண்டேன். அவர் சிறிது நேரம் அங்குமிங்கும் தேடிப்பார்த்தார். அகப்படாததால் போய் விட்டார். அடுத்த நாள், கவின்பெறும் கார்த்திகைத் திருநாளன்று காலையில், சிவபூசை வேதிகையில் சிந்து பூந்துறையைச் சார்ந்த சிவசிதம்பரம்பிள்ளையெனும் தூய சிவபக்தர் பூசனை புரிந்து கொண்டிருந்தார். என்னுடைய புண்ணியவசம், நான் அப்பெரியார் திருக்கண்களில் புலப்பட்டேன். அவர் ஆண்டவன் முருகன் தந்தது என எண்ணி, என்னை இருகரங்களாலும் எடுத்துத் திருமிடற்றில் அணிந்து கொண்டார். இப்பொழுதுதான் என் சாதகத்திலிருந்த பீடைகளெல்லாம் நீங்கின. பத்தி பழுத்து ஒழுகும் உள்ளத்தினையுடைய அப்பெரியாரை நண்ணிய ஞான்றே, நான் எல்லா நலனும் பெற்றின்புற்றேன். தேவார திருவாசகங்களைக் கேட்டுமகிழ்ந்தேன். திருக்கோயிலுக்குச் சென்று மகிழ்ந்தேன். அன்றால் நான் பெரிதும் பரிசுத்த மடைந்தேன். அவரைப் பிரியாது நான் வெகுநாட்கள் வாழ்ந்து வந்தேன். பின்னர் அடியேன் சிவபெருமான் திருவடி நீழலையடையுங்காலம் சமீபித்தது. அவர் ஒருநாள் திருக்குற்றாலம் வடவருவியில் குளித்துக் கொண்டிருந்தார். தண்ணீர் வேகத்தில் நான் அடிபட்டுச் சித்திராநதியில் விழுந்து, முத்தி பெற்றேன். சார்ந்ததன் வண்ணமாதல் எனும் உண்மையினை எனது சரிதம் இனிது புலப்படுத்தும். எனது வரலாறு, பலவகையான சீர்திருத்தங்களை அன்பர்களுக்கு நினைவு ஊட்டுதற்பொருட்டே சொல்லப்பட்டது. என் அருமை யறியாதார் சிறுமையினையும், அருமை யறிந்தார் பெருமையினையும் இனிது எடுத்துக் காட்டியிருப்பது கண்டு தெளிந்து நண்பர்கள் உண்மை உணர்ந்து. உருத்திராக்கமணிகளைப் பெரிதும் போற்றி அணிந்து இன்புறுவார்களாக!

சுந்தரன்.

# மயக்க மறுப்பின்மேற் குறிப்பு

'இலக்கணவிளக்க உரைச் சமாதானப் போலித்தேற்றம்' 'இலக்கணவிளக்க உரைவரலாற்று மயக்க மறுப்பு' என்னும் தலைப் பெயர்களின் கீழே எழுதப்பட்டுள்ள இரண்டு கட்டுரைகள் முன்னர் உள்ளன. அவற்றுள் போலித்தேற்றத்தை ஆராய எமக்குப் பொழுதின்மையின், அதனை விடுத்து மயக்க மறுப்பின்மேற் சில குறிப்புக்கள் எழுத நேர்ந்தனம். கூ-ஆம் பாலில் 'இது குறித்துப் பின்னும் எழுதுமாறில்லை' எனத் தெரிவித்துளே மாயினும், மயக்க மறுப்பினைக் கண்ட பின்னர் யாம் சில எழுதுதல் கடனெனத் தோற்றியது. இது பிழையாயின் அறிஞர்கள் பொருத்தருள்வார்களாக.

இலக்கணவிளக்கவுரை வரலாறு பற்றி எம்முடன் மாறுபட்டெழுதுவோர் அனைவரும் சிவஞான முனிவர்பால் தமக்குள்ள அளவுகடந்த அன்பினாலே, அப்பெருமான் எழுதியவற்றுள் யாரும் ஒரு சிறு பிழையும் காணல் தகாதென்னுங் கருத்தினை அடிப்படையாகக் கொண்டுளாரென்பது அவற்றைப் படிப்போர்க்குப் புலனாகும். முனிவரது பேரறிவினையும், கல்வியின் பல துறையிலும் விரிந்து சென்ற அவரது புலமைத்திறத்தினையும், தமிழ்மொழிக்கும் சைவ சமயத்திற்கும் அவர் செய்துள்ள அளவுபடாத உதவிகளையும் நினையுங்கால் நம்மனோர்க்கு அவர்பால் வரம்பற்ற அன்புண்டாவதிலும், அவரைத் தாம் தாம் நினைந்தவாறெல்லாம் பாராட்டுவதிலும் வியப்பொன்றுமில்லை. இவ்வாற்றால் எமக்கும் அவர்பால் அன்புளதென்றே நினைந்து கொண்டிருக்கின்றேம். ஆனால் பிறரது அன்பிற்கும் எமது அன்பிற்கும் வேற்றுமை யிருத்தல்கூடும்.

மயக்க மறுப்புடையார் எம்மைக் குறித்துச் சற்று வன்மையான சொற்களை வழங்கி வந்திருப்பினும் அவை சீரிய தமிழ்ச் சொற்களாக விருத்தலானும், எம்மை நண்பரென்று பாராட்டியிருத்தலானும் பெரிதும் உவகையே யெய்துகின்றேம்.

நண்பர்கள் எம் கருத்தினை உள்ளவாறறிந்துகொள்ளவில்லை யென்றும், யாம் கூறாதவொன்றனையும் கூறியதாக வைத்துக் கொண்டு ஆராய்ச்சி செய்கின்றார்களென்றும் இச் சிறு பிழைகளை யாதல் யாம் அவர்கள்பாற் சார்த்தாதிருக்க முடியவில்லை. யாம் இலக்கணவிளக்கப் பாட்டியலின் பதிகமும், அதனுரையும் முதலாயின வெல்லாம் பார்த்த பின்னரே 'இலக்கணவிளக்க வுரையாளர் யார்' என ஆராயத் தொடங்கினேம். இலக்கணவிளக்க வுரையாளர் இன்னாரென்பது ஆராய்ந்து துணியவேண்டிய நிலையில் இருத்தல்போன்றே அந்நூற்குப் பொதுப்பாயிர மமைத்தாரும், அதன் சிறப்புப் பாயிரத்திற்கு உரை கூறினாரும் பாட்டியலின் பதிகத்திற்கு உரை பகர்ந்தாரும் இன்னாரின்னாரென்பது ஆராய்ந்து துணிய வேண்டிய நிலையிலுளது. துணியப் படாத நிலையிலுள்ள அவற்றைப் பார்க்கினும் இலக்கணக்கொத்து முதலியன சிறந்த சான்றுகளாமெனக் கருதியே இவையிற்றையே யெடுத்துக்கொண்டேம். பின், ஓர் உரை வரலாற்றினை அறிந்து கோடற்கு அவ்வுரையின்கட் காணப்படுங் குறிப்புக்கள் சான்றுகளாய் அமையுமேல் அவை பிறவெல்லாவற்றினும் வலியுடையனவென்று கருதி அவைகொண்டு முடிவு செய்தனம்.

இனி, மயக்க மறுப்புரை வரைந்த நண்பர் பாரிப்பாக்கம் கண்ணப்ப முதலியாரவர்களால், இலக்கணவிளக்கவுரை அந்நூலாசிரியரதன்றென்பதற்கு யாம் காட்டிய ஏதுக்கள் மறுக்கப் பட்டு விட்டனவாவென்று பார்ப்போம்.

1. இலக்கணவிளக்கப் பதிப்புரையிலிருந்து யாமெழுதியதனை யெடுத்துக்காட்டி, அது "அப்பதிப்புரை யாசிரியராம் சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்களான் ஆண்டே மறுத்தொதுக்கப் பட்டதொன்றாம்" எனக் கூறப்பட்டுளது. யாமெழுதியதனைச் சிறிது கருத்தூன்றிப் படிப்போர் அஃது எந்த அளவிற்கு எடுத்துக் காட்டப்பட்டுளதென அறியலாகும். அது கிடக்க,—தமோதரம் பிள்ளையவர்கள் யாம் ஆராய்ச்சிக்கெடுத்துக்கொள்ளாத எவ்வாதரவுகளைக்கொண்டு அதனை மறுத்

தொகுக்கி யிருக்கின்றார்கள்? அவர்கள் மறுத்துவிட்டதாகவே வைத்துக்கொள்வோம். தமோர்தரம்பிள்ளையவர்கள் கூறுவன வெல்லாம் நம் முதலியாரவர்கட்கு உடன்பாடாமா? பிள்ளையவர்கள் இலக்கணவிளக்கப் பதிப்புரையில் பக்கம் 7 முதல் 15 வரையில் சிவஞான முனிவர் இலக்கணவிளக்கச் சூறாவளி வரைந்தது பெரும்பிழையாமென விரிவுபடக் கூறியிருப்பதுடன், சூறாவளியின்கண் சில பகுதிகளையெடுத்துக்காட்டி மறுத்தலுஞ் செய்திருக்கின்றார்கள். "இலக்கணவிளக்கச் சூறாவளி யென்று ஓர் அநியாயகண்டனம்" என்றும், "சிவஞான முனிவரர் தெரித்த குற்றங்களின் இலக்ஷணம் எத்தன்மைய என்பதற்கு மேலே காட்டிய ஐந்து உதாரணமும் போதுமாதலின் இவ்வளவில் நிறுத்துதும்' என்றும் இங்ஙனமாகப் பிள்ளையவர்கள் கூறுவனவெல்லாம், உடம்பாடாயினன்றே 'அவர்களான் ஆண்டே மறுத்தொதுக்கப்பட்ட' தென்று முதலியாரவர்கள் கூறுவது சால்புடைத்தாகும்?

2. உரைகாரர் நூலாசிரியரை எவ்விடத்தும் படர்க்கையில் வைத்துக் கூறுவது என்னும் ஏதுவை யெடுத்துக்கொண்டு, அதற்கு மறுப்பாக "அவ்வாறியற்றுதன் முறையன்றாமென்னும் நியதியொன் றுண்டாயினன்றே அது முறை பிறழ்வாவது அங்ஙன மேதுமின்மையின் அவ்வாறு கடா நிகழ்த்துதலே முறையன்றாமென்றொழிக" என்று கூறப்பட்டுளது. இங்ஙனம் மறுக்கலுறுவார்க்கு யாம் வாய்வாளாமை மேற்கொண்டிருத்தலன்றிச் செயற்பாலது பிறிதில்லை. இனித் தொல்காப்பிய வுரைகள் முதலாயினவெல்லாம் அவ்வந் நூலாசிரியர்களாலேயே இயற்றப்பட்டனவென்று கூறின் அன்றெனா மறுப்பார் யார்?

3. உரைகாரர் நூலாசிரியர் கருத்தில் ஐயுறவு தோன்றக் கூறுவது என்னும் ஏதுவை ஆராய்ச்சிக்கெடுத்துக்கொண்டு மறுப்பாக "அவ்விலக்கண விளக்க நூலார் இவ்வாறு அந்நூலகத்துச் செய்துபோந்த மயக்க வழூஉக்கள் பலவற்றுள்" என்பது முதலாக "காழ்ப்பின்றி யூழ்த்தமரமென வடியொடு முறிந்து வீழ்ந்தமை காண்க" என்பதுகாறும் வரையப்பட்டுளது.

இதனைப்படிப்பவர்கள் செந்தமிழ்ச் செல்வி சிலம்பு 2, பக்கம் 302 முதல் 306 வரையில் யாமெழுதி யிருப்பதனை ஒருமுறை உடன் சேர்த்துப்பார்த்தல் வேண்டும். இலக்கணவிளக்க நூலாசிரியர் சிறிதும் அறிவில்லாதவராகவே மறுப்புரைகாரர்களாற் கூறப் படுகின்றனர். சிவஞான முனிவர் குறுவளி கொண்டு தூற்றி விட்ட பின்னரும் நம் நண்பர்கள் இலக்கணவிளக்கத்தைச் சிறி தும் எஞ்சாது படித்திருப்பது மிக்க வியப்பையே விளைக்கின் றது. பிற நூலுரைப்பகுதிகளை அங்கங்கு கிடந்தவாறே யெடுத் துக்கொண்டு தம்மை மறந்து மயங்கிக் கூறும் பெரும் பித்த ராகிய வைத்தியநாத நாவலர் தாமே உரையெழுதும்பொழுது ஓரிடத்திலாவது மறந்தும். யாம் உரைத்தாம்' என்றாற் போலத் தன்மையாற் கூறாதிருப்பது எல்லாவற்றையுங்காட்டில் வியப்பை விளைக்கின்றது. இவை கிடக்க,—இலக்கணவிளக்க நூலார் செய்துபோந்த மயக்க வழூஉக்களை யெடுத்துக்காட்டப் புகுந்த வர்கள் உரையின் கண்ணுள்ள வழுக்களை யெடுத்துக்காட்டிய தென்னை? அவ்வாறு காட்டியவெல்லாம் இலக்கணவிளக்க உரை யாளர் அந்நூலாசிரியரின் வேறாவர் என்னும் எம்கொள்கைக்குத் துணையாவன வன்றி, அங்ஙனமன்றென்னும் தம் கொள்கைக் குத் துணையாமா றியாங்ஙனம்? இவ்வாற்றால் இலக்கணவிளக்க உரைகாரர் அந்நூலாசிரியரல்லரென்பதற்கு யாம் காட்டிய வேதுக்கள் பிறரால் ஒரு சிறிதும் அசைக்கப்படவில்லையென்பது காட்டுதன் மாத்திரையே இங்கு எழுதுதற் கமைந்தாமென்க.

இலக்கணவிளக்கநூலும், அதனுரையும் வழுவுள்ளனவல்ல வென்பது எம் கருத்தன்று. அவற்றில் எத்தனையோ பலவழுக்க ளிருத்தல் கூடும். ஆயினும் அவை எமது கொள்கையை மறுக்கப் புகுந்தார்க்குத் துணையாவன அல்லவென்க. யாம் மிகவுஞ் சுருங்கிய அறிவும், சுருங்கிய கல்வியும் உடையே மென் பதனை நன்கு அறிவேம். யாம் கூறுவனவற்றில் பற்பல வழுக்க ளிருத்தல் கூடும். வழுவென அறிந்தகாலை யாம் அவற்றைத் திருத்திக்கொள்ளுதலுங் கூடும். ஆயினும் அவ்வப்பொழுது அறிந்தவற்றைத் தானே அவ்வந்நிலையில் உண்மையெனக் கொள் ளல் வேண்டும்.

இனி, நண்பர் கண்ணப்ப முதலியாரவர்கள் ஒரு திருக்குறட் பாவை

"எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்வில்லைப்
பெரியார்ப் பழித்தொழுகு வார்"

என்று பிழையாக எழுதியிருக்கின்றார்கள். அங்ஙனம் தவறு நேர்வது யாவர்க்கு மியல்பே. வெண்பாவின் தளை சிதையு மாறும் பிழைபட்டிருத்தலால் இதனைப் படிப்பவர் யாரேனும் பிழையாகப் பாடஞ்செய்து விடாமைப்பொருட்டு இங்கே யெழுதுகின்றேம்.

"எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்."

பண்டிதர், ந. மு. வேங்கடசாமி நாட்டார்.

---

# முற்காலமுந் தற்காலமும்

(சசஎ-ம் பக்கத் தொடர்ச்சி)

"பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரண மென்ப"

(பொய்யும் வழுவுந் தோன்றிய பிற்காலத்தே இருடிகள் கரணங்கள் கட்டினரென்று கூறுவர், கரணம்=வேள்விச்சடங்கு) ஒல்காப்பெரும்புகழ் தொல்காப்பிய முனிவர் இவ்வாறு சூத்திரஞ் செய்தமையால் தற்காலத்துப் பொய்யும் வழுவும் இருந் தமையும், தமக்கு முன்னொரு காலத்து அவை இலாமையையுங் குறித்தார். தொல்காப்பியருக்கு முன்னிருந்த நூல்கள் நமக்கு வந்தில; ஆனால், அவற்றில் பொய்யையும் வழுவையும் பற்றிய செய்யுட்கள் இருந்திராவென்று கூறுவதற்கு இயலாது. அற்றேல் பொய்யும் வழுவுமில்லாத காலங்கிடையாது என்பது துணிபோவெனின்? அன்று; உலகத்தின் மானிடப்பிறவி

தோன்றிய ஞான்று அதிலிருந்த மக்கள் தொகை மிகச்சிறிதே என்பது பலர்க்கும் உடன்பாடாகலின், அக்காலத்தவர் ஒருவரை யொருவர் பகைத்துப் பொய்யுரைத்துப் பழிசுமந்திருப்பரென எண்ணவிடமில்லை சிறிது குறையும் பிழையுமிருந்திருக்கலாம். தமக்கு வேண்டியவை கிட்டா விடத்தன்றே மக்கள் களவாடிக் கபடஞ்செய்வர்; தாம் விரும்பியவை எளிதிற் கிடைப்பனவாயிற் கபடஞ்செய்யக் காரணமென்னை? மனிதர்தொகை சிறிதாயும் அவர்கட்கு வேண்டிய நிலமும் பொருளும் ஏராளமாயுமிருக்கை யில் சண்டையும் வழக்கும் பொய்யும் வழுவும் எழ அவசிய மில்லை; ஆனால், மக்கள் பெருகி வளர வளர அறிவாற்றலும் உடல்வன்மையும் உடையவர், பிறரைவிடச் சுகமும் செல்வமும் பெற்று வாழ்ந்திருப்பர். அதனால் பிற்காலத்தில் பொறாமையும் பகையும் பிறந்து தீயொழுக்கங்கள் நிலைபெற்றிருக்கவேண்டும். இஃது உலகந்தொடங்கிய சிலகாலத்துக்குள்ளாகவே நிகழ்ந் திருக்கவேண்டும். அற்றைநாள் மக்கள் கவலையற்றுச் சுகித் திருந்தாரெனக் கருதுவது தவறு. வாழ்வதற்குரிய வசதிக ளின்மையால் அவர்கள் பெரிதும் வருந்தியிருப்பார்களென்பதி லையமில்லை. அடர்ந்து வளர்ந்த உயர்ந்த மரங்களும், புகுந்து போவதற்குரிய புதர்களும், நிறைந்த இருண்ட அச்சமிகுந்த காடுகளினிடையிலும், மலைக்குகைகளிலும் அவர்கள் வெயிலிற் காய்ந்தும் மழையில் நனைந்தும் முரட்டுத்தனமாகச் செய்யப் பட்ட மழுங்கிய கருவிகளைக் கைபிற்பிடித்து வேட்டையாடி யகப்பட்டதையுண்டு காலங்கழித்திருப்பர்.

நடுக்கத்தைத் தரும் பெரிய உருவத்தையுடைய கொடிய விலங்குகள் அக்காலத்தில் மிகுந்திருந்தன. இவற்றுடன் போரிடுவதிலும் இரவிலிவற்றால் தாக்கப்படாமல் தம்மைக் காத் துக் கொள்வதிலும் அவர்க்குப் பலவகையான கஷ்டங்களுண் டாகியிருக்குமென்பது எளிதிலுணரப்படும். ஆதலின், வைய கத்தில் முதன் முதல் மனிதர் தோன்றிய நாளில் அவர்களது வாழ்க்கை சிறந்திருந்தது எனக் கூறல் பொருந்தாது. மக்கள் மிலேச்சர்களாய் கைக்கெட்டியதை உண்டுதிரிந்த காலத்தை விட்டு, அவர்கள் பெருகி பல வகுப்பினராய்ப் பிரிந்து அரசுக

ளேற்படுத்திக் கல்வியும் ஒழுக்கமும் நிறைந்து விளங்கிய பிற்காலத்திற்றான் அவர்களது உயர்வையும் பெருமையும் நாம் காணலாகும். தொல்காப்பிய மெழுதப்பட்ட நாளில் மனிதருக்கிருந்த துன்பங்களுந் தொல்லைகளும் இக்காலத்தில் நமக்கிருக்குங் கவலைகளுக்குங் கஷ்டங்களுக்கும் ஈடாகாதென்பதை நாம் ஒத்துக்கொள்ளலாம். ஆயினும், அன்றும் பொய்யும் வழுவும் இருந்தமை முன் சூத்திரத்திற் காட்டப்பட்டது. "ஆதி ஊழி கழிந்த முறையே அக்காலத்தந்தந் தொடங்கி, இரண்டாம் ஊழி முதலாகப் பொய்யும் வழுவுஞ் சிறந்து தோன்றிய பிற்காலத்தே" என்று உரைகாரர் கூறுமாற்றான் இதை அறிக. அன்றியும், இழிவு, இழவு, வறுமை, மூப்பு, பிணி, வருத்தம், அணங்கு, விலங்கு, கள்வர், உறுப்பறை, குடிகோள், கொலை, ஆறலைத்தல் முதலிய சொற்கள் தொல்காப்பியத்தில் ஆளப்படுகின்றமையால் பண்டை நிலைமையிலும் இவை இருந்தமை புணரப்படும். திருக்குறளையு மிவ்வாறே ஆராய்ந்து வள்ளுவர்காலத்தின் நிலைமையையுங் கண்டு கொள்க.

இனி, தமிழரசர்கள் செங்கோலோச்சி நாடு புரந்ததை விரித்துக் கூறும் பத்துப்பாட்டு எட்டுத்தொகை முதலியவற்றைச் சோதித்தாலும், முன் கூறியவைக்கு முரண்படு முண்மை யொன்றும் புலப்படாது. இவற்றிலுங் கண்மூடி விழிப்பதற்குள் இருந்தவிடந் தெரியாது மறையுங் கள்வரையும், பேன் பிடித்த துணியுடுத்துக் கால்கொப்புளிக்க பாலைவனங் கடந்து பசியுடனே திரியும் பாவலரையும், கள்ளுண்டு மயங்கிக் களிப்போரையும், வழிமறித்துக் கொலைசெய்து கொள்ளையாடுவோரையுங் காண்கின்றோம். சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய நூற்களிலும் இவை காணப்படும். இதுவரையுங் கூறியதெல்லாம் மிகத் தொன்மையான காலத்திலும் தீமையிருந்த தென்பதைக் காட்டும் பொருட்டேயொழிய அக்காலத்தில் முன்னோரடைந்த உன்னத நிலைமையைக் குறைத்துச் சொல்வதற்கன்று.

இந்நாள் மக்கள் முன்னோரைவிட மிகக்கொடிய நிலைமையிலிருக்கிறார்களென்பது உண்மையே. காரணமென்னவெனின்,

பத்துவருடங்களுக்கு முன்னிருந்ததைவிட இப்பொழுது அதிக மனிதரிருக்கிறார்கள். நூறாண்டுகட்கு முன்னிருந்தவர்களின் தொகை இப்பொழுதுள்ளவர்களின் தொகையைவிட மிகக் குறுகியதென்பதிலையமில்லை. ஈராயிரமாண்டுகட்கு முன்னிருந்தவர் தொகை சாலச் சுருங்கியிருக்குமென்பது வெளிப்படை. இதனாற் பெறப்படுவதென்னவெனின், காலப்போக்கில் மக்கள் முன்னிருந்ததை விடப்பல்லாயிரமடங்கு பெருகியிருக்கிறார்கள். ஆனாலவர்களுக்கு அவசியமான நிலமும் பொருளும் பெருகவில்லை, ஆயிரஞ்சதுர அடி அளவுள்ள ஓர் நிலத்தில் நூறு மரங்கள் வளர்வதற்கும் அதே நிலத்தில் ஆயிரம் மரங்கள் வளர்வதற்கும் வித்தியாசமிருக்குமன்றோ? நூறு மரங்களுக்கு வேண்டிய உணவை ஆயிரம் மரங்களுண்டால் அவை வளர்ச்சியிலும் பருமனிலும் குறைவடைந்திருப்பது இயல்பேயாகும். இங்ஙனமே, மூன்றுகோடி மக்கள் வசித்தநாட்டில் முப்பதுகோடி ஜனங்கள் வசிப்பாராயின் அவர்களுக்குள் பொய்யும், போரும், பொறாமையும், வழக்கும் மலிந்திருக்குமென்பதிற்றடையென்னவிருக்கிறது. முற்காலத்தின் சிறப்பையும் இக்காலத்தின் கொடுமையையும் நினைந்து வருந்துவோர் இதை மனதிற்கொள்வாராக. இக்காலத்தில் துரைத்தனத்தார் ஒவ்வொரு வருடமும் வெளியிடும் நியாய விசாரணை வரலாறுகளில் கொலை, களவு முதலியவை பெருகுவதற்குக் காரணம் தேசத்தில் மழையிலாமையும் பஞ்சமுமேயென்று கூறுவதை நம்மிற் பலரறிவோம். இஃது உண்மை என்பது வள்ளுவர் நூலில் வான்சிறப்பு என்னு மதிகாரத்தால் விளங்கும். அவ்வதிகாரமே முற்காலத்திலும் மனிதர் பஞ்சத்தால் வருந்தியதுண்டென்பதைக் காட்டும். இறந்த நாட்களில் மாதமும்மாரி தவறாமற் பெய்து வந்ததென்று கொள்ளப் போதிய சான்றுகளில்லை. இறையனாரகப் பொருளுரையில் பஞ்சத்திற் பிழைப்பதற்கென்று சங்கப் புலவர்கள் பல்வேறு நாடுகள் சென்றமை காண்க. முற்காலத்திலிருந்த சில உயிர் வகைகள் இப்பொழுதில்லை என்று உயிர் நூல் கூறுவதை மறுக்க முடியாது. உயிர்வாழும் ஜந்துக்கள் பெருகப்பெருக அவற்றிற்கு வேண்டிய உணவு போதாமையால் அவை ஒன்றுடனொன்று

போரிட்டதில் வலிமையும் கஷ்டங்களைச் சகித்துக்கொள்ளும் தன்மையுமுள்ளவை எஞ்சிநிற்க, மற்றவை ஒழிந்தனவென்பது உயிர் நூல் கொள்கை.

மனிதர் தமது அறிவாற்றலால் மற்ற ஜந்துக்களை மேற்கொண்டு பூமியில் அதிகாரஞ் செலுத்துகின்றன. அவர்களுக்குபயோகப்படும் பசு, எருமை, நாய், குதிரைமுதலியவற்றைக் காப்பாற்றி வைத்துக்கொண்டு ஏனைய சிங்கம், புலி, கரடி, யானை ஆகிய இவற்றைக் கொன்றுவருகின்றனர். இதை விரியக்காண விழைவோர் முன்னே குறிக்கப்பட்ட உயிர்வகைகளின் தோற்றம் என்னும் நூலைப் பார்க்கவேண்டும். நாள் போகப்போக ஜீவனம் செய்வது முன்னினு மதிக வருத்தமாவதைக் கண்டபின் இந்நாளில் குற்றமும் பிழையும் அதற்கேற்ப மலிந்திருப்பதைநோக்கி எவரும் வியப்படையார். இங்ஙனமே, தொல்லுலகின் மக்களின் ஒழுக்கத்தைப் பார்த்து நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை. பொதுவாக இப்படிச்சொல்வதால் ஆன்றோரின் உயர்வை அறியாது எழுதினேனென்று கருதற்க.

(தொடரும்)

க. ப. சந்தோஷம், B.A., L.T.

---

# மதிப்புரை

## திருக்குறளின் திரட்டும் தெளி பொருள் வசனமும்

இது மதுரைத் தமிழ்ச் சங்கம் திருவாளர் மு. ரா. அருணாசலக் கவிராயரவர்களால் இயற்றப்பெற்றது. செந்தமிழ் மொழிக்குக் குன்றுமணியென விளங்குந் திருக்குறளைத் தமிழுலகிற் படிக்க விழையாதாரிலர். இத்தகைய நூலினைப்பொருளுடன் முழுதுங் கற்க ஆவகாசமில்லை யென்பார்க்குத் திரட்டு வடிவில் யாதொரு பதிப்பு மிதுகாறும் வெளிவாராக் குறையினை நீக்குவான் பொருட்டு இவ்வரிய பதிப்பு எழுந்ததாகும். இஃது அருங் குறள் பல திரட்டப் பெற்றுள்ளதாய், தெளிபொருள்

விளக்க வசனமும், மேற்கோள்களு முடையதாய், கையடக்க மான சிறிய அளவில் வெளிவந்திருக்கின்றது. விலை ரூபா ஒன்று.

கிடைக்குமிடம்:— பி நா. சிதம்பர முதலியார் பிரதர்ஸ்,
புது மண்டபம், மதுரை.

---

# குறிப்புக்கள்

## திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தின் நான்காவது ஆண்டு நிறைவுவிழா

### அழைப்பு

நாளது மார்கழித்திங்கள் 18, 19 ஆம் நாட்களில் (1, 2-1-1925) திருநெல்வேலி, தெப்பக்குளத் தெரு, தாயம்மையம்மாள் பெண்கல்விச் சாலையில் அமைத்திருக்குங் கொட்டகையின்கண் கோயமுத்தூர் வக்கீல் திருவாளர் C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் B. A., F. M. U. தலைமையின் கீழ் அறிஞர் சிலர் சொற்பொழிவுகள் நிகழ்த்துவார்கள். அவ்வமயம் அன்பர் பலரும் வந்து கேட்டு இன்புறுமாறு வேண்டுகிறோம்.

இங்ஙனம்,

வ. திருவரங்கம் பிள்ளை
தி. மாணிக்கவாசகம் பிள்ளை } அமைச்சர்கள்.

### ஒரு நன் கொடை

திருவாங்கூர்ச் சமஸ்தானத்தைச் சார்ந்த கோட்டாற்றில் பிரபல வர்த்தகரும் நமது கழகப் பங்காளிகளி லொருவருமான திருவாளர், சி. வ. வீரவாகுபிள்ளை அவர்கட்கு நாளது கார்த்திகைத்திங்கள் 7-ம் (22-11-24) சனிக்கிழமையன்று நிகழ்ந்த 60-ம் ஆண்டு நிறைவு விழாவின் அறிகுறியாக சைவத்தையும், தமிழையும் ஒருங்கே வளர்த்துவரும் திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தின் நிதியில் சேர்த்துக்கொள்ளும் பொருட்டு அவர்கள் மணியாடர் மூலம் ரூபா பத்து (10-0-0) நன் கொடையாக உதவி முன்மாதிரி காட்டியதற்காக இச்சங்கத்தார்கள் மனமார்ந்த நன்றியை அவர்களுக்குச் செலுத்துகின்றார்கள்.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தார்.

---

Printed by Sivakami Vilasam Press, Published by V. Subbiah
for The S. I. S. S. W. P. Society, Madras.